# கம்பன் மணி மலர்

காளயுக்தி 1979






கம்பன் கழகம் — காரைக்குடி

# கம்பன் மணி மலர்

## 1979



காளயுத்தி—பங்குனி—உரு முதல் உஅ வரை

1979—ஏப்ரில் 8 முதல் 11 வரை நிகழ்ந்த

**41 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு.**

**கம்பன் கழகம், கம்பன் மணி மண்டபம், காரைக்குடி - 2.**

## உள்ளுறை

# முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி; கவிச்சக்கரவர்த்தி. காப்பிய வானில் கதிரவனாய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலையும் வேதக்கடலும் உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன் எந்தைபிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப் பகுதியை மீட்டுச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்டராமன் எனப் பெயர் சூடிக்கொண்ட ஆதித்தன் (கி.பி. 871-907) காலத்தில், அவனால் பெரிதும் மதிக்கப்பெற்றவனாய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனை, பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல் இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வளநகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லையிலாக் கவிதா சன்னதமும் கற்றோரையெல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார்வேந்தர்களும் ரசிகப் பெருமக்களும், கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்றுவாராயினர்.

கம்பனின் பேராற்றற் பெரும்புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு விளங்குவது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராம காதை! தமிழ்மொழியின் வளத்திற்கும், தமிழர் தலை நிமிர்வுக்கும் ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவுவது கம்பராமாயணம். தமிழ்மொழியின் தனிப் பெரும் காப்பியத்தை, என்னப்பன் கம்பன், சடையன் பதியாம் வெண்ணெய் நல்லூரில் அரங்கேற்றினான். மன்னர்களும், மறையோர்களும், ரசிகப் பெருமக்களும், அறம் பேணும் பொதுமக்களுமாக நிறைந்திருந்த கண்ணியம் நிறைந்த அவைக்களத்திலே அரங்கேற்றம் நடைபெற்றது. பவித்திரமான அக்காப்பியம் அரங்கேறிய புனித விழா ஒரு பெருந்திருவிழாவாக, "நாவலோ, நாவல்!" என்று நடந்திருக்க வேண்டும்.

சகாப்தம் 807; கலியாண்டு 3986-க்குச் சரியான விசுவாவசு — பங்குனி 4ஆம் தேதி, (கி. பி. 886 பெப்ருவரி—23) புதன்கிழமை அஸ்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங்கேறிய பெருநாள். அன்றுதான் என்னுடையன் கம்பனை, "கவிச்சக்கரவர்த்தி" என்று அறிவுடையுலகம் மனமாரப் பாராட்டி விருதளித்து மகிழ்ந்தது.

கம்பன் பிறந்த நாளை நாமறிய எவ்வகைச் சான்றுகளும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால், "கவிச்சக்கரவர்த்தி" பிறந்த நாளை நாம் நன்கறிவோம். பங்குனி-அத்த நாளில்தானே "கவிச்சக்கரவர்த்தி" பிறந்தான்! எனவே, இராமாவதாரம் அரங்கேறியதும் "கவிச்சக்கரவர்த்தி" என்ற விருதுப் பெயரைக் கம்பன் ஏற்றருளியதுமான அந்தப் பங்குனி அத்த நாளையே கம்பன் திருநாளாக-ஜன்ம நட்சத்திரமாக-ஏற்று விழா எடுத்து வருகிறோம். மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாட்களில் காரைக்குடியில் உள்ள கம்பன் மணிமண்டபத்திலும், பங்குனி அத்த நாளில் நாட்டரசன் கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதிகொண்டு எழுந்தருளி அருள் சுரக்கும் கம்பன் பள்ளிபடைத் திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா, எவ்விதமான, சாதி, சமய, மொழி வேறுபாடின்றி யாவரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும். புலவர்களும், கலைஞர்களும், கவிஞர்களும், திறனாய்வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டுதோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும் பெருமை செய்கின்றனர்.

கம்பன் திருநாட்செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வருகிறது. நாற்பத்தோர் ஆண்டுகட்கு முன் முந்நூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திருநாளின் செலவு ஆண்டுதோறும் வளர்ந்து, எத்துணைச் சிக்கனமாக நடத்தினும், ரூபாய் பதினையாயிரத்திற்குமேல் உயர்ந்துவிட்டது. விழாச்செலவுக்காக இதுவரை யாரையும் நன்கொடை கேட்டு அணுகியதில்லை. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் தாங்களாவே முன்வந்து உவந்தளிக்கும் நன்கொடை, செலவின் ஒரு சிறுபகுதியையே ஈடு செய்கிறது.

இந்நிலையில் கம்பன் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பயனுள்ள மலர் வெளியிடுவதென்றும், அதில் விளம்பரங்கள் வெளியிடுவதென்றும் முடிவு செய்யப்பெற்றது. அதற்குக் கம்பன்பால் அன்பும் அடியேன் பணியின்பால் பரிவும் உள்ள அன்பர்கள் பலர் விளம்பரங்கள் உதவி, இப்புனிதப் பணிக்கு ஆக்கம் தர முன்வந்தனர்.

இவர்கட்கெல்லாம் எளியேன் என்ன கைம்மாறு இயற்றவல்லேன்? என்னப்பன் கம்பனும், அவன் பரவிடும் முழுமுதற் பரம்பொருளும் இவ் அறவோர்கட்கும், இவர்களின் முயற்சிகட்கும், தொழில்துறை வாணிபங்கட்கும் எல்லா நலன்களையும் வளங்களையும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மன மொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகிறேன்.

எல்லா வகையாலும் முன்னரும், பின்னரும், கம்பன் திருநாளுக்கும், கம்பன் திருப்பணிகட்கும் உதவிய - உதவி வருகிற - அறவுள்ளம் படைத்த பெரியோர்கள் அன்பர்கள் யாவர்க்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி மகிழ்கிறேன்.

கம்பன் மணிமண்டபம்,<br>
காரைக்குடி - 623 002.<br>
8, எப்ரில், 1979.

அன்பும் பணிவுமுள்ள,<br>
**கம்பன் அடிப்பொடி**<br>
செயலாளன், கம்பன் கழகம்.

## கம்பன் கழகங்கள் - முகவரியுடன்

1. கம்பன் கழகம்,
   கம்பன் மணிமண்டபம்,
   காரைக்குடி-623 002.
   [தொலைபேசி : 600]

2. கம்பன் கழகம்,
   கம்பன் அருட்கோயில்,
   நாட்டரசன்கோட்டை - 623 556.

3. கம்பன் கழகம்,
   ஆமருவியப்பன் கோயில்,
   தேரழுந்தூர்-609 808
   மாயூரம் வழி.

4. கம்பன் கழகம்,
   சீராமவிண்ணகரம்,
   கள்ளிப்பட்டி - 638 505.
   Via-Erode R. M. S.
   [தொலைபேசி : 44]

5. கம்பன் கழகம்,
   நாமக்கல்-637 001,
   சேலம் மாவட்டம்.

6. கம்பன் கழகம்,
   சீதா கல்யாண மண்டபம்,
   கோபிச்செட்டிப்பாளையம் - 638 452.
   [தொலைபேசி : 84]

7. கம்பன் கழகம்,
   116, முத்துமாரியம்மன் கோயில் தெரு,
   புதுச்சேரி - 605 001.
   [தொலைபேசி: 509]

8. கம்பன் கழகம்,
   10, பெரிய அக்ரகாரம்,
   ராசிபுரம் - 637 408,
   சேலம் மாவட்டம்.

9. கம்பன் கழகம்,
   மணி பீடர் பள்ளி,
   கோயமுத்தூர் -.641 037,
   (தொலைபேசி : 35851)

10. கம்பன் கழகம்,
    4, பி.சாலை ரோடு,
    சேலம் - 636 001.
    [தொலைபேசி : 3501]

11. கம்பன் கழகம்,
    55, காமராஜ் அவனியூ, அடையாறு,
    சென்னை-600 020.
    [தொலைபேசி : 411110]

12. கம்பன் கழகம்,
    சித்ரா ஜவுளி ஸ்டோர்ஸ்,
    புதுக்கோட்டை - 622 001.
    [தொலைபேசி : 550]

13. நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்,
    கம்பராமாயண மண்டபம்,
    1, பெருமாள் தெற்கு மாட வீதி,
    பாளையங்கோட்டை - 627 002.

14. மலேசியக் கம்பன் கழகம்,
    61, Jalan Hang Jebat,
    MALACCA, (Malaysia)
    (Phone : 3206)

15. கம்பன் கழகம்,
    K. T. R. Perfumers,
    திருவாரூர் - 610 108.

16. கம்பன் கழகம்,
    "அன்பு நிலையம்"
    55, பெரிய தெரு,
    பட்டுக்கோட்டை - 614 601.
    [தொலைபேசி : 75]

17. கம்பன் கழகம்,
    62, கச்சேரித் தெரு,
    திருப்பத்தூர் - 635 601.
    வடஆர்க்காடு மாவட்டம்.

18. கம்பன் கழகம்,
    1, மாணிக்கம் பிள்ளை தெரு,
    சிவகங்கை - 623 560.

19. கம்பன் கழகம்,
அனுமார் கோயில்,
பரமக்குடி - 623 707.

20. கம்பன் கழகம்,
13, E B. காலனி,
காந்தி நகர், வேலூர் - 632 006.
வடஆர்க்காடு மாவட்டம்.

21. கம்பன் கழகம்,
8, சிங்கார முதலி தெரு,
நல்லியக்கோடன் நகர்,
திண்டிவனம் - 604 002.

22. கம்பன் விழாக் குழு,
திருச்சித் தமிழ்ச் சங்கம்,
மேலரண் சாலை,
திருச்சி - 620 008.

23. கம்பன் கழகம்,
8, இராஜ வீதி,
காஞ்சிபுரம் - 631 502.

24. கம்பன் கழகம்,
தஞ்சாவூர் -.613 001.

25. கம்பன் கழகம்,
மதுரை.

26. கம்பன் கழகம்,
அவிநாசி - 638 654

27. கம்பன் கழகம்,
37, மெயின் ரோடு,
கவுந்தப்பாடி - 638 455.
Via—Erode, R. M. S.

28. கம்பன் கழகம்,
23, காமராஜர் ரோடு,
பொள்ளாச்சி - 642 002.

29. கம்பன் கழகம்,
23-24, அன்னதானவிநாயகர் கோயில் தெரு,
பேட்டை.
திருநெல்வேலி - 627 004.

30. கம்பன் கழகம்,
தென் திருப்பேரை - 628 623
திருநெல்வேலி மாவட்டம்.

31. கம்பன் கழகம்,
வாழியூர் - 632 315
வ. ஆர்க்காடு மாவட்டம்.

32. கம்பன் கழகம்,
7-B, வாங்கப்பாளையம்,
சேலம் சாலை,
கரூர் - 639 006
திருச்சி மாவட்டம்.

33. கம்பன் கழகம்,
4 A, டாக்டர் சரத் பானர்ஜி ரோடு,
கல்கத்தா - 25,
மே. வங்காளம்.



# கம்பராமாயணத்தில் காணும் சமுதாயங்கள்

நா. வரதராஜுலு நாயுடு



## 1. கட்டுரையின் நோக்கம்

1.1. கவிஞன் தான் வாழும் சமுகத்தின் இயல்பைப் பல துறைகளில் கூர்ந்து ஆராய்ந்து, அழகிய, பொருள் செறிந்த, உறுதியான, அறிவு சான்ற, தெளிவான, ஒளி பொருந்திய, இனிய சொற்களால் நமக்குத் தருகிறான். அவன் வாழ்ந்த காலத்தில் சிறப்புற்றிருந்த கலைகள் அனைத்திலும் கவிஞன் தோய்ந்தவன்; அவனுக்குப் முன்பு இருந்த கவிகள் அனைத்தையும் ஐயம் திரிபு அறக் கற்றுத் தேர்ந்தவன். சிறந்த கவிஞனுடைய சொல்லும் பொருளும் அவனுக்கு முந்திய அறிவு அனைத்துக்கும் பயன்; அவனுக்கு பிந்திய அறிவு அனைத்துக்கும் வித்து

1.2. கவிஞனுடைய கற்பனை அவன் வாழ்ந்த அக, புற நிலைகளிலிருந்து ஊற்றெடுக் கிறது. அவன் புது உலகைச் சிருஷ்டிக்கிறான் என்பது உண்மையே; எனினும், அவ் உலகு அவன் வாழும் உலகச் சூழ்நிலையிலிருந்தே உண்டாவது.

ஒரு நோக்கில், அவன் பழைமைப் பண்பின் செறிவு; மற்றொரு நோக்கில், அவன் புதுமைப் பெற்றியின் சிருஷ்டி கர்த்தா.

சில சமயங்களில் கவிஞன் வாழும் உலகும், அவனுடைய கற்பனை உலகும் இரண்டறப் பின்னிப் பிரிக்க இயலாமல்போகின்றன.

1 3. கம்பன் நமக்குக் காட்டும் சமுதாயங் களும், சமுதாயக் கருத்துகளும் இராமாவதாரக் காவியம் முழுவதிலும் விரவி உள்ளன. சிறப்பாக, அயோத்தியிலும், கிட்கிந்தையிலும், இலங்கையி லும் அவற்றைக் காண்கிறோம்.

1.4. சமுதாய இயல்களுள் முக்கியமானது 'அரசு' (State). அரசியல், சமுதாய நெறியைக் காப்பது அரசன். தலைவன் (இறைவன்) நெறி வழாமல் இருப்பது அன்றி, மக்களையும் நெறியிற் புறம் செலாது காக்க (தடுக்க) வேண்டும்.

1.5. அயோத்தியில் நாம் காணும் அரசியல் ''தனிக் கோல் உலகேழும் செல்ல நின்றான்.... அரசர்க்கு அரசன்,'' தசரதனுடையது. கிட்கிந்தையில் ''பஞ்சின் மெல் அடியாள் பங்கன் பதயுகம் அலாது, யாதும் அஞ்சலித்து அறியலா ஆணை''யன், வாலியுடையது. இலங்கையில், ''குடிமை மூவுலகும் செய்யும் கொற்றம்'' இராவணனுடையது; மீச் செல்வது, 'சென்று செருச் செய்'வது இம்மூன்று அரசுத் தலைவரும் காவியத்தின் தொடக்கத்திலும் இடையிலும் இறுதியிலும் அழிகின்றனர்.

1.6. தசரதன் ''அறமூர்த்தி அன்னான்''. வாலி ''மறை நெறி வந்தன மணமும் இல்லை; குலமுதற்கு ஒத்தன குணமும் இல்லை; உணர்வு

சென்றுழிச் செல்லும் ஒழுக்கு'' (following the emotions) இராவணன் ''ஊர் அகத்தின், திறம்பு காலத்து யாவையும் சிதையினும், சிதையா அறம் புகாது.''

1.7. மூன்று நாடுகளிலும், அங்கு வாழ்ந்த மக்களுடைய செயலைக் காண்கிறோம்; பேச்சைக் கேட்கிறோம்; உணர்ச்சிகளை உறுகிறோம்; யாவும் கம்பன் உளவாக்கிய பாத்திரங்களின் வாயிலாக; அல்லது கவிக்கூற்ருக. மற்றும், நாவாய் வேட்டுவன், எண்கின் வேந்தன், தண்டக முனிவர் இயக்கர், சவரி, தேவர் ஆதியோரையும் காண்கிறோம்; ஆனுல், அவர்களைச் சமுதாயமாகக் கொள்ள இயலாது.

1.8. மூன்று சமுதாயங்களிலும் உள்பூசல்கள் நேரிடுகின்றன. இலங்கைக்குப் புறப்பகையும் நேர்ந்தது. ஆட்சி மாற்றங்களும், போரும், மூன்று நாட்டினரையும் ஒரு கண்டம், நெருக்கடி (crisis) நிலையில் கொண்டு செல்கின்றன. அவை அரசனையும், குடி மக்களையும் பாதிக்கின்றன.

நிலைமை மாறும் முன்னரும், மாறுதல் ஏற்படும் போதும், மாறிய பின்பும், சமுதாயத்தில் மக்களுடைய எண்ணம், சொல், செயல்களை ஆராய்வது இந்தக் கட்டுரை; தனிப் பாத்திரங்களின் எதிர் இயக்கங்களைக் கூறுவது நோக்கம் அன்று.

1.9. பொதுவாக, கம்பன் காலத்தில் ஆட்சி முறையில் மக்களுக்கு எவ்விதப் பங்கும் இருந்ததாகத் தெரியவில்லை. வரி (இறை), சுங்கம் (உல்கு), அறம் கூறு அவை, போர் தொடங்குதல், நாட்டைக் காத்தல் போன்ற சமூகக் கடமை-உரிமைகளில் அரசன் மக்களைக் கேட்டதாகத் தெரியவில்லை. ஐம்பெருங்குழு ஆகிய அமைச்சர், புரோகிதர், சேனைத்தலைவர், தூதர், ஒற்றர் என்போரை அரசனே நியமித்துக்கொண்டான். வேந்தன் குடிமக்களுக்கு ''எத்துயரம் செய்திடினும்,'' குடிமக்கள் அவன் ''கோல் நோக்கி வாழ்''ந்தனர்; மக்களுக்கு வேறு போக்கிடம் இல்லை. ''அரசனை இளைஞன் என்று இகழலாகாது; பெருந்தேவர் மனித உருவில் அரசராகத் திகழுகின்றனர்'' என்ற மனுநெறி, வளர்ச்சியுற்றதாகக் கருதப்படும் சமுதாயங்களில் ஊன்றி இருந்தது. இச்சூழ்நிலையை மனத்தில் கொண்டு இவ் ஆராய்ச்சியைத் தொடங்க வேண்டும்.

1.10. முதலில், காவியத்தில் அயோத்தியிலும் இலங்கையிலும் நாம் காணும் பொது மக்களுடன் அறிமுகம் செய்துகொள்வோம். மிதிலை மக்களைக் காதல் புனைவில் மட்டும் காண்கிறோம்; கிட்கிந்தை மக்களை ஒரு நெருக்கடி நிலையில் மட்டுமே காண்கிறோம்.

## 2. மக்கள்

### (அ) அயோத்தியில்

2.1.1. கோசலம் பெரும்பான்மை மருத நிலம்; சிறுபான்மை குறிஞ்சி, முல்லை நிலங்கள். நெய்தலைக் கூறும் இருபாட்டுகள், (நாட்டு 1930) காவிய மரபு பற்றி வந்தனவே. (''கண்ணன் கடலைக் கண்ணுற்ருன்''– கடல் காண் 2) என்ற இடத்து, இராமன் முதல் முறையாகக் கடலைக் கண்டது கூறப்படுகிறது. ''மருதம் வீற்றிருக்கும்'' (நாட்டு 4) வீறு பிறிதிற்கு இல்லாத சிறப்பு, கொண்டிருக்கும்.

2.1.2. கோசல நாட்டு மக்கள் விழா அணி விரும்புலார்; கோழி, எருமைப் போர் காண்பார்; எருது கொண்டு உழுவார்; விருந்து உண்பார்; நெடுநாட்களாக ஏற்பட்ட மரபு வழி வந்த ஒழுக்கத்தை அவர்களுடைய நல் குடிப்பிறப்பு சுரந்தது; யாவரும் நல் அறத்தையே ஆற்றினர்; ஏற்றம் அல்லது இழிதகவு இல்லை; வறுமை இல்லை; பொய் உரை இல்லை; அறியாமை இல்லை; பொலிவு, நீதி, அறங்கள், காலமாரி என்பன யாவும் நிலை பெற்றிருந்தன.

2.1.3. அயோத்தி விண்ணவரும் வாழ விரும்பும் நகரம்; அழகு அங்கு குடி கொண்டது; அரசர் அங்கு குழுமினர்; பல அரண்களை உடையது; நாலு வேதம் அன்ன வாயில்களை உடையது; பாற்கடல் அலைகளைப் போன்ற வெண்மையான மாளிகைகளை உடையது; செல்வம் பொருந்தியது; ஒளி வீசுவது.

2.1.4. குறைபாடற்ற அறநெறி பொருந்திய தசரதனை ஒத்த குடிமக்கள் பலர் அயோத்தியில் வாழ்ந்தனர். அவர்கள் செல்வமும் கல்வியும் பொருந்தியவர்; கலைகளைப் பேணுபவர்; கீதம், பந்து, பரதம் பயில்பவர்; புரவிச் செண்டு, நீர் விளையாட்டு, ஊசல், விழா, வேள்வி போன்றன அவர் பொழுது போக்குகள். பெண்கள் விருந்தோம்பலில் சிறந்தவர்

கொள்வார் இலர்; வறியோர் இலர். கல்லார் இலர். கல்வி, கேள்வி, தவம், அன்பு, தருமம்-இவை முதிர்ந்து பழுத்த இன்பம் என்னும் கனியை மக்கள் துய்த்தனர்.

கம்பன் கண்ட இலட்சிய சமூக வாழ்க்கை இது ஆனால்....

2.1.5. கொள்வார் கொடுப்பார் இல்லாத நாட்டிலும், பெண்கள் "வருந்தி வந்தவர்க்கு" ஈந்தனர் (நாட்டு-36); "பழங்கணோடு (துன்பத்தோடு) இரந்தவர்க்கு பரிவு (வருத்தம்) தீர்தர வழங்கினர்" சிலர் (நகர-67); "வறியவர் யாவையும் முகந்து கொள்க" என்பது, தசரதன் மகப்பேறு அடைந்தபோது இட்ட ஆணை (திரு அவதார-110); ஊரவர் இராமனை "மைந்த, பசும் பொன்...வறியோர் கொள வழங்கு" என்கிறார் (கைகேயி சூழ்வினை-97); வனத்திற்குப் போகும் போது, ஒரு வேதியனுக்கு இராமன் பசுக் கூட்டம் ஈந்து, அவ்வேதியன் ஆசை தீரவில்லை என்ற காட்சியை நினைவுகூர்கிறாள் சீதை (காட்சி-26)

2.1.6. அயோத்தி மக்கள் யாவரும் தசரதனை ஒத்தவர். "கோன் நிகர் குடிகள் தம் கொள்ளை சான்றன" (நகர்-33) "அவ் ஊர்ச் சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை ஒத்தார் (கைகேயி சூழ்வினை - 70). இராமன் முடிசூடப் போகிறான் எனக் கேட்ட நகர மாந்தர் "உய்ந்தது இவ் உலகம் என்பார்", "பூவலயம் இன்று தனி அன்று, பொது என்பார்" (பூமி ஒருவருக்கே உரியது அன்று; அனைவருக்கும் பொதுவாக உரியது); எனினும், அவனுக்குத் தாமே ஏவல் செய்ய முடியவில்லையே; மன்னர் அன்றோ ஏவல் செய்ய உரியர்; அம்மன்னர் தவம் புரிந்தவர் ஆதல் வேண்டும் என்பார் (கைகேயி சூழ்வினை-92, 102)

அத்தகையோர் இராமன் முடிதுறந்து காட்டுக்குப்போன போது என்ன செய்தார் என்பதை அடுத்த பகுதியில் காண்போம். இராமன் இலங்கை வெற்றிக்குப்பின் அயோத்திக்குத் திரும்பிய போது நகரமக்கள் "வீங்கிய உவகை மேனி சிறந்தது," மகளிர் "பூணின் மெய்ம்மை மறைத்தனர்" என்பது அன்றி, (திருமுடிசூட்டு 7,9) அவருடைய வேறு செயல்களை நாம் காவியத்தில் காண்பதில்லை.

2.1.7. வேந்தனுக்கு "நேய மங்கையர்" இருந்தனர் (எழுச்சி-62) அவர்கள் அவனுடன் இராமன் திருமணத்துக்குச் சென்றனர். கைகேயியை 1000 கணிகையர் புடை சூழ்ந்தனர்; சுமித்திரையை 2000; கோசலையைப் பலர் (எழுச்சி 63-66). மாதர் சிவிகை (18), வண்டி (24), யானை (18), குதிரை (40)களில் சென்றனர்; சிலர் ஓடினர்.

வால்மீகத்தில், இராமனுக்கும் "நேய மங்கையர்" இருந்தனரோ என்ற ஐயம் எழுகிறது (யுத்த காண்டம் 21.3); அவ் ஐயத்திற்கு கோவிந்தராஜர் சமாதானம் கூறுகிறார்.

நாட்டு நடைமுறை வாழ்க்கை இது.

2.1.8. புகாரிலும், மதுரையிலும், இராசமாபுரத்திலும் காணும் பள்ளிகளையும் கோயில்களையும் அயோத்தியிலும் மிதிலையிலும் இலங்கையிலும் கம்பன் கூறுதொழிந்தது சுட்டத்தக்கது.

(ஆ) மிதிலையில்

2.2.1. கம்பனுடைய மிதிலைக் காதல் புனைவு வாய்ந்தது. சிருங்கார ரஸம் தவிர ஏனைய சுவைகளை அந்நாட்டு மக்களிடம் நாம் காண்பதில்லை. அங்குள்ள சோலை, கழனி, பொய்கை, நதி, ஓடை, குளம் யாவற்றிலுமே காதல் காட்சிகள் திளைக்கின்றன. (அகலிகை-7-12)

மிதிலை நகரம் "திருமகள் இருந்த செய்ய போது எனப் பொலிந்து தோன்றும்" (மிதிலைக் காட்சி-4). இளம் செந்நிறம் உடைய மாளிகைகள் தாமரை இதழ்போல அடுக்கடுக்காக விரியும். மைந்தரும் மாதராரும் இன்பக்களிப்பில் ஈடுபட்டுள்ளனர். ஆடக அரங்குகள், ஊசல்கள், இசைத்தேன், விளையாடும் வாவிகள், பெண்கள் பந்து பயில் இடங்கள், வண்டுகள் ஆர்க்கும் பொழில்கள் இவற்றோடு நம்மைக் கம்பன் மிதிலைக்குள் நேராக "கன்னி மாட"த்துக்கு அழைத்துச் செல்கிறான்.

நமக்கு அறிமுகம் செய்விக்கப்படும் நகர மக்கள் இராமனுடைய அழகிலும் வில் திறத்திலும் ஈடுபட்ட ஆண்கள்; பெண்கள், சீதையின் தோழியர், தாயர், தாதியர், சீதையின் அழகை மாந்தி மயங்கியவர் ஆகியோரே. மிதிலையில் வேறு சுவைகளுக்கு இடம் இல்லை.

(இ) இலங்கையில்

2.3.1. இலங்கை மக்களை நாம் முதலில் காண்பது சூர்ப்பணகை "சீதை தன்மை உரைப்

பென் யான்'' என இலங்கைக்கு ஓடியபோது. இலங்கைப் பெண்கள் ''மூன்று உலகு உடையவன் தங்கை மூக்கு இலள், தனியவள், வர, இரங்கி ஏங்கினர். அவளைத் தழுவிக் கொண்டு அடிவீழ்ந்து, புலம்பி, புரண்டு இராவணன் கொலுவுக்குக் கொண்டுசென்றனர். வீரர் ''கரத்தொடு கரங்களைப் புடைத்து, கண்களில் நெருப்பு எழ விழித்து, வாய் மடுத்து நிற்கின்றார்.'' (இராவணன் அணங்குறு 26,27-41, 43)

''முழவினில், வீணையில் முரளி, யாழினில், குழலினில், சங்கில் தாரையில் எழுகுரல் இன்றியே'' என்றைக்கும் கேட்டிராத அழுகுரல் இலங்கையில் பிறந்தது. (36).

இனித் தோன்ற உள்ள அவல நிலைகளுக்கு உற்பாதம் ஆகும் இது.

2.3.2. அடுத்து, நாம் இலங்கையைக் காண்பது அனுமன் கண்களால். உலகத்தின் செல்வம் எல்லாம் இலங்கையில் குவிந்தது. உலகம் என்னும் பெண் தன் முழு உருவையும் திருவையும் காண்பதற்கு வைத்த சிறு கண்ணாடி இலங்கை மாநகரம் (கடல் தாவு-79 ). அங்கு குவிந்துள்ள உலகச் செல்வத்தின் செறிவும், திரட்சியும், சிறந்த நுண்ணிய அறிஞருடைய கண்ணுக்கும் புலன் ஆகா; ஏனெனில், கண் புலனுக்கு எல்லை உண்டு; இலங்கையில் உள்ள பொருள்களுக்கு எல்லை இல்லை (79-3).

2.3.3. இலங்கை மக்கள் பாடுவார், ஆடுவார், இயம் (வாத்தியம்) கொட்டுவார், நடம் காண்பார் (ஊர்தேடு-23). மக்கள் துய்க்கும் இன்பத்தைக் கூற வாய்குழறும்; நெஞ்சால் நினைப்பதும் தவறு என அனுமன் எண்ணினன் (25). [இது வால்மீகியின் இடக்கரை அடக்கல் போலத் தோன்றுகிறது.] ''களிக்கின்றார் அலால், கவல்கின்றார் ஒருவரைக் காணேன்'' அனுமன் (30). ['கள்' என்ற பகுதி வினைப்பொருளில் களித்தல்-மயங்குதல் என்ற பொருள் தரும். 'களிப்பு'ம் 'இன்பமும்' முற்றிலும் வேறானவை. அரக்கருடைய பெருமை, வீரம், பெற்ற வரம், மாயம், தொகை, படைகள் யாவும் அனுமனும் வியத்தற்குரியன (33, 39). அரக்கிமாரும் அரக்கரும் கழித்து வீசிய அணிகலன்களால் வீதி தூரும் (37). ஊரிலும், ஆகாயத்திலும், இருளிலும் தத்தம் தொழில்மேல் அரக்கர் செல்வார் (45, 47). இத்துணையும் புறநகரில் அனுமன் காண்பன.

2.3.4. அகநகரில் அரக்கர் இருப்பை அவர் ஈட்டும் தவம் நாள்தோறும் வளர்ந்துகொண்டிருப்பதையும், அமரர் ஈட்டிய தவம் அரக்கர் தவத்திற்கு இணை ஆகாமையையும் அனுமன் காண்கிறான்; வளரும் செல்வம் குவிந்த செல்வத்தை என்றேனும் ஒரு நாள் விஞ்சிவிடும். அந்நிலையில், பழஞ்செல்வர் ஆட்ட புதுச் செல்வர் ஆடுவது இயற்கை அன்றோ ? (101)

வரம்பு இன்றி வளர்ந்த காமப் பயிருக்குக் கள் என்னும் நீரை வார்க்கின்றனர் (105)

2.3.5. பல நிலைகளில் உள்ள அரக்கர், அரக்கியரைக் கண்டு, இலங்கையைத் துருவித் தேடிய அனுமனுக்கு அழியப்போகும் இச்செல்வத்தின்பால் இரக்கம் பிறக்கிறது. ''அந்தோ. இந்த நெடுநகர்த் திரு நீங்கும்'' எனத் திரு உள்ளம் நெகிழ நின்றான். (203).

இலங்கைச் செல்வம் வரன்முறை அற்ற செல்வம்; இலங்கையர் வாழ்க்கை பெருமிதம், செருக்கு நிறைந்தது; அது ''பொக்கென ஒரு கணத்தே போகத் தொலையும்'' தறுவாயில் கம்பன் நமக்கு அதைக் காட்டுகிறார்.

## 3. மக்கள்-அரசன் தொடர்பு

3.1.0. இதுவரை, மக்கள் மீது நம் கண் ஓடிற்று. இனி, கம்பன் காட்டும் 3 நாடுகளில் மக்களுக்கும் அரசனுக்கும் உள்ள தொடர்பைக் காண்போம்.

### (அ) அயோத்தியில்

3.1.1. ''வேந்தர் வேந்தன்'' தசரதனுடைய செங்கோல் அறிவால் இயன்றது. அவ் 'அறிவு' அடாத நெறியில் செல்லாது; மறை சொல்லும் நீதி நெறியை விடாது (எதிர் கொள்-1). அவன் ''அறத்தின் மூர்த்தி'' (வடிவம்) (அரசியல் 1). அவனிடம் அறம் ஒன்றே ''பணி கேட்கும்'' (2). தான் அறவழி நிற்றலோடு அமையாது, ''வெள்ளமும், பறவையும், விலங்கும், வேசையர்—ஆம், அவன் ஆட்சியில் வேசையர் இருந்தனர்—உள்ளமும்கூட ஒருவழி ஓடின'' (6). மிதிலையில் வேசையர் நெஞ்சம் நிலைமாறும் (மிதிலைக்காட்சி 16).

3.1.2. குடிமக்களுக்கு மட்டும் அன்றி, தாவரங்களுக்கும் தசரதன் உடலாக இருந்தான். அவருக்கும், அவற்றுக்கும் எவரேனும் ஊறு இழைத்தால், அதைத் தனக்கு ஏற்பட்ட ஊறாக (துன்பம் ஆக)க் கருதினன். ''சென்று, நின்று, வாழ் உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினன் (அரசியல் 10)

ஓர் ஏர் கொண்டு சிறு புலத்தைக் கட்டிக் காக்கும் வறிஞன் போல, உலகம் முழுவதையும் காத்து அரசு செய்கிறான் (12).

புல்லுக்குத் துன்பம் தராமல், பனித் துளியைச் சூரியன் தன் கிரணங்களால் எடுப்பது போல, மக்களுக்குத் துயர் வராமல் பகையை வென்று நாட்டைக் காக்கிறான் (குலமுறை கிளத்து- 16).

3.1.3. ''உலகம் உயிர்; அவ் உயிரைத் தாங்கும் உடல் மன்னன்'' (மந்தரை சூழ்ச்சி-25); ''அறமும் மனச்செம்மையும், அருளும் நீத்தபின் ஆவது இல்லை'' (19); ''அன்பில் சிறந்த செல்வம் இல்லை'' (24); நல்லவருடைய துணை மன்னனுக்குச் சிறந்த ஆயுதம் (28); ''யாரு டனும் பகைகொள்ளாமையால், போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது (21). இக்கருத்துகள் அயோத் தியின் அரசியலை ஆக்கின. இவற்றோடு, வதிட்டன் வாயால் இராமனுக்குக் கூறப்படும் உறுதி உரைகள் இரண்டு வெளி வருகின்றன. (1) ''அந்தணர் பெரியர்; அயன், அரி, அரன் மூவரிலும் பெரியர்'' (15), (2) மங்கையரால் வரும் காமம் கேடு தரும்'' (29) என்பன.

இவற்றில் இரண்டாம் கருத்தை இராமன் சுக்கிரீவனுக்குக் கூறும் அறிவுரையிலும் காண் கிறோம். ''மங்கையர் பொருட்டு எய்தும் மாந் தர்க்கு மரணம்...அவர் (மங்கையர்) திறத் தினானே அல்லலும் பழியும் ஆதல்'' என (கிட்கிந்தை அரசியல்-13)

3.1.4. காவியத்தில் பொதுவாகச் சாதி உயர்வு-தாழ்வுகளைக் காண்பது மிகச்சில இடங் களிலேயே. இராமனுக்கு முந்நூல் உண்டு (கடிமண - 60, கைகேயி சூழ்வினை - 100); இராவணனுக்கும் உண்டு (காட்சி-82); வதிட்ட னுக்கு உண்டு (கிளை கண்டு நீங்கு - 135). அந்தணர் அரசரை வணங்குவது முறை அன்று; ப்ராஹ்மண ப்ரஹ்மசாரியாகத் தோன்றிய அனுமன் இராமன் அடிபணிய, ''கேள்வி நூல் மறை வலாள, தகாத செய்தது என்னை நீ? தருமம் அன்றால்'' என இராமன் அவனைத் தடுக்கிறான் (அனும்-30).

3.1.5. ஓரிடத்தில், வால்மீகத்திலிருந்து கம்பன் செய்த மாறுதல் குறிப்பிடத்தக்கது. இராமன் வனம் போக, தசரதன் இறந்தபின் ஆட்சிப் பொறுப்பை வதிட்டன் ஏற்கிறான் (அயோத்தியா காண்டம்-67.38. 68.1); ஆனால், கம்பன் வதிட்டன் வாயால் ''சேனாபதியின் சுமந்திரனை, 'செயற்பாற்கு உரிய செய்க' என்றான்'' எனக் கூறவைக்கிறான் (தசரதன் மோட்சம்-29). அவ்வாறே, ''சடையன் மரபு ளோர்'' மௌலியைக் கொடுத்ததும் கம்ப னுடைய புனைவு.

3.1.6. முதியோனான சுமந்திரன் முடிசூடப் போகும் இளைஞனை இராமனைத் ''தொழுது வாய் புதைத்துப்'' பிறகே பேசுகிறான் (கைகேயி சூழ்வினை-84); மேலும், சுமந்திரன் இராமனை ''அடி உறத் தழுவுவான்'' (கால்களைப் பிடித்துக் கொண்டான்); ''புரளுவான்'' (தைலம் ஆட்டு 25). இராமனும் இவற்றை ஏற்றுக்கொள்வான்.

3.1.7. அரசனை உலகம் (மக்கள்) ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற கருத்து சில இடங் களில் அரும்புகிறது; ஆனால் மலரவில்லை.

கைகேயி காலில் விழுந்து இரக்கும் தசரதன், பரதன் அரசை ஏற்றுக்கொள்வதை உலகம் விரும்பாது. ''அன்னான் கொண்டாலும் நள்ளாது இந்த நானிலம்'' (கைகேயி சூழ்வினை- 30).

வதிட்டன் வாக்கில் இதே கருத்து, ''கொள் ளாது உலகம்'' (நகர் நீங்கு-43)

பரதன் வாக்கில் ''பாரோர் கொள்ளார்'' (பள்ளி படை-81).

ஆனால், அரசனை மக்கள் தம் தலைவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற உடன்பாட்டு நீதியை அயோத்தியிலோ, கிட்கிந்தையிலோ, இலங்கையிலோ நாம் காண்பதில்லை.

3.1.8. அக்காலத்தும், அறநெறி அகற்றி, பொருளை விரும்பிய மன்னன், அரசு கிடைத் ததும் தருமத்தை மறந்து ''இழிதொழில் இயற்றி, பழி வரும் வழியில் செல்லும் பதகன்'' மக்களைப் பகைவரிடமிருந்து காவாமல் அஞ்சின மன்னன்-இத்தகையோர் இருந்தனர் என்பதைப் பரதனுடைய சூளுரையால் அறிகிறோம் (பள்ளி படை 104-6)

### (ஆ) கிட்கிந்தையில்

3.2.1. வாலியினுடைய அரசு சிறந்ததாக இருந்திருக்க வேண்டும். (''நிறை அரசு''), வாலி நிறைவுற்றவன் (''நிரம்பினான்''), என அவன் இறந்தபின் இராமனுக்குத் தோன்றியது. அரசைச் சுக்கிரீவன் ''வலிதின் கொண்டான்'' (முறையாகக் கொள்ளவில்லை! வாலி இயற்கை மரணம் எய்தி இருப்பின் முறைமையில் அரசு அங்கதனுடையது). இந்த நிலையில், மக்கள் சுக்கிரீவன் ஆட்சியை எதிர்க்கக்கூடும் என்ற

அச்சம் இராமனுக்குத் தோன்றியது. அத்தகைய நிலை ஏற்படாமல் தடுக்க,இராமன் அனுமனைச் சுக்கிரீவனுக்குத் துணையாக இருக்கப் பணிக்கிறான்.

''நிரம்பினான் (வாலி) ஒருவன் காத்த நிறை அரசு....மற்றொரு தலைமகன் (சுக்கிரீவன்) வலிதில் கொண்டால், அரும்புவ நலனும்தீங்கும்; ஆதலின், ஐய, நின்போல் அறிவினோரால் நிலையினை (நிலை பேற்றை)ப் பெறுவது'' (அரசியல்-29).

சுக்கிரீவனுக்கு இராமன் பட்டாபிஷேகம் செய்து வைத்ததும், அங்கதனை இளவரசன் ஆக்கியதும், அவற்றைக் கிட்கிந்தை மக்கள் ஏற்றுக்கொள்வரா என்பதை அறிந்து அல்ல. அவர்களுடைய ஏற்பை அறியும் எண்ணமே இராமனுக்கு உதிக்கவில்லை.

3.2.2. அவ்வாறே, விபீஷண பட்டாபிஷேகமும் இலங்கையர் ஏற்பை எண்ணி நிகழ்ந்தது அன்று.

3 2.3. ஒரு மனிதன் மற்றொரு மனிதனுடைய காலில் வீழ்வதைக் காவியத்தில் பல இடங்களில் பார்க்கிறோம்.

ஆனால், எந்தக் குரங்கும் மற்றொரு குரங்கின் அடியில் வீழ்வதை கம்பன் எங்கும் கூறவில்லை. அம்பு தைத்து இறக்கப் போகும் வாலி காலில் சுக்கிரீவன் விழவில்லை; ''இருந்தனன்'' (வாலி வதை-136); அவனை வாலி தழுவினான். தாதையைக் கண்ட அங்கதன் பூமியில் வீழ்ந்தான்; அழுங்கினன்(151) அவனுக்கு வாலி கூறிய அறிவுரை இராமன் ''மலர் அடி சுமந்து வாழ்தி'' என்பது (154). தன்னை அங்கதன் தூதன் என்று அறிமுகப்படுத்தும் அனுமன் (பிணி வீட்டு-77) இலங்கையிலிருந்து திரும்பி வந்த போது அங்கதனைத் தொழவில்லை; சுக்கிரீவனையும் தொழவில்லை.

வானரர் மனிதருடைய அடியில் தாழ்ந்தனர். (வாலி வதை -157). தம் தோளில் ஏற்றிச் சென்றனர் (திருவடி தொழுத-49-2, 3, 4, முதற் போர் புரி-217, கும்பகருணன் வதை-225, நிகும்பலை 101).

தன் இனத்தையும் பிற இனங்களையும் வணக்கிப் பணி கொள்வது மனித இனத்தின் சிறப்பு இயல்பு.

### (இ) இலங்கையில்

3.3.1. காவியத்தில் நாம் முதலில் காணும் இலங்கையள் தாடகை அவளைக் காணுமுன்பே, விசுவாமித்திரன் இராமனுக்குக் கூறும் அவளுடைய வரலாற்றால், அவளுடைய ''உயிர் கொன்று உழல் வாழ்க்கை'' யையும், ''கூற்றின் தோற்றத்'' தையும், ''மா ஐ இரு நூறு ஒன்றிய வலி'' யையும், ''ஊழித்தீ'' அன்ன தன்மையையும் கேள்வி உறுகிறோம் (தாடகை வதை-20), அவள் முனிவருடைய யாகங்களை அழிப்பதும், கொன்று திரிவதும் ''இலங்கை அரசன் பணி''யினால் (25) எனக் கம்பன் காவிய எதிர் நாயகனை நம் மனத்தில் எதிர்ச் சாய்வு எண்ணம் ஏற்படும் வகையில் அறிமுகம் செய்விக்கிறான். தாடகையை இராமன் கொன்றான்; போரில் அரக்கர் சிரக் குவைகள் உக்க (வீழ்ந்தன); அவளுடைய மக்களின் ஒருவன் வான்புக்கான்'' (குலமுறை கிளத்து-29).

3.3.2. தாடகை இராவணனுடைய பாட்டி; மாரீசன் அவனுடைய மாமன். இந்திரியங்களை அடக்கி இருந்தான் (சூர்ப்பணகை சூழ்ச்சி - 70), இராவணன் அவனிடம் சென்றதும், வந்த காரியம் அறியாமுன்னம், இராமனைப்பற்றிய பேச்சு எழுமுன்னமே, மாரீசனுடைய உணர்ச்சி, பயம் ஒன்றே; ''பொருந்திய பயத்தன்... வெருவுகின்றான்'' (மாரீசன் வதை-1) என ஒரு பாட்டில் இருமுறை வருகிறது. மாரீசன் அஞ்சுவது இராவணனை; அவன் வஞ்சனையை அன்று. ''இறுதிக்கு (ஓர்) அம்பு உய்க்கும் போர் வில்லி'' (17) என முன்பே அறிந்துங்கூட அவன். இராமனை அஞ்சவில்லை.

3.3.3. இராவணனுக்கு அஞ்சிய மக்களைப் பல இடங்களில் காண்கிறோம்.

அசோக வனக் காவலர் பொழில் அழிந்ததை இராவணனிடம் முறையிடச் சென்றபோது, ''நீர் இடு துகிலர், அச்ச நெருப்பிடு நெஞ்சர்'' (சிறுநீரால் அவர் உடை நனைந்தது; இராவணனிடம் கொண்ட அச்சத்தால் நெஞ்சு சுட்டது; ''தெற்றிப் பிணங்கிடு தாளர்'' (கால்கள் முன்னே போகாமல் பிணங்கிக்கொண்டன) (பொழில் இறுத்த-55)

கிங்கரர் மடிந்ததைச் சொல்லும் ''நந்த வனத்து நாயகர்'' நடுங்கி, ''பிந்து காலினர்... பெரும் பயம் பிடரின் உந்தச் சென்றனர்'' (கிங்கார் வதை-55).

சம்புமாலி இறந்த செய்தி கூற வந்த காவலர் ''விக்கா நின்றார்; விளம்பல் ஆற்றார்; வெருவி விம்முவார்.'' (விக்கல் எடுக்கிறது - எதுவும் கூற முடியவில்லை, பயப்பட்டு ஏங்குவார்) இராவணன் ''நடுங்காதீர்'' எனச் செய்தி கூறுவார் (சம்புமாலி-50).

அக்கன் இறந்ததை இராவணனுக்கு யாருமே சொல்லவில்லை. படைகள் அஞ்சி ஓட, ஊர்

அழுத குரலைக் கேட்டு, மண்டோதரி இராவணன் அடியில் வீழ்ந்து அழவே இராவணன் அறிந்தான் (அக்க குமாரன் வதை-48).

கட்டுண்ட அனுமனைக் கண்டு பலர் அஞ்சினர்; பலர் நிலை திரிந்து ஓடினர் (பிணி வீட்டு-9) பல தப்பு எண்ணங்கள், கற்பனைகள் முளைத்தன; சிவ பெருமானோ (15), யமனோ (13) என.

இலங்கை எரியுண்ண, எல்லோரும் ஓலம் இட்டு ஓடினர்; புகையில் மறைந்தனர், இராவணன் ஆணைக்குப் பின்னரே வீரர் அனுமனுடன் போர் புரிந்து மடிந்தனர் (இலங்கை எரியூட்டு-1, 27, 47, 60) எரியைத் தடுக்கத் தாமே முற்பட்டிலர்.

இலங்கையின் அரணையும் படைத்தலைவரையும், படைகளையும், இராவணனுடைய வலிமையையும், மக்களின் திறனையும், இராமனுக்குக் கூறிய வீடணன், இலங்கைக் குடிமக்களைக் கூறாது விட்டது சுட்டிக் காட்ட வேண்டுவது. அனுமன் சீதையிடம், "வெள்ளம் எழுபது உளது அன்றோ.... எண்ணற்கு அரிய படைத்தலைவர் இராமற்கு அடியார், யான் அவர் தம் பண்ணைக்கு ஒருவன்" என்றதனோடு மாறுபாடு காணத்தக்கது.

3.3.4. யுத்த காண்டத்தில், சேனைகளை அன்றி, குடிமக்கள் வாழ்க்கையைக் கூறும் பகுதி மிகக் குறைவு. அங்கதன் தூது செல்ல, நகர மக்கள் "அழுகின்ற கண்ணர் ஆகி 'அனுமன் கொல்?' என அஞ்சினர்" (அங்கதன் தூது-15)

இராவணனோ, இந்திரசித்தோ, மற்ற தலைவர்களோ, போர்க்கோலம் பூண்டு ஊரிலிருந்து புறப்படும் போது மக்கள் ஆரவாரிக்கவில்லை; அவர்களுடைய வெற்றியை விரும்பி வாழ்த்தவில்லை.

3.3.5. முதற்போரில் உற்றுத் திரும்பிய இராவணனைப் பெண்கள் "**தனித்தனி**" நோக்கினர். (கும்பகருணன் வதை-3.) அவனை நோக்கிய கண்களால் அருகில் இருந்தவரை நோக்கி, அவர் கண்களால் அவர் கருத்தை அறியவோ, தம் கண்களால் தம் கருத்தை அவருக்குத் தெரிவிக்கவோ, இல்லை. ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளவே அஞ்சினர். சுற்றத்தார் எந்திரக் கருவிபோல, உணர்ச்சி அற்று இயங்கினர் (5).

3.3.6. கும்பகருணன் நகர மக்களுள் சிறந்தவருடைய கருத்தை வெளியிடுகிறான்; "கருத்து இலா இறைவன் தீமை கருதினால் அதனைக் காத்து (தடுத்து)த் திருத்தலாம் ஆகில் நன்றே; திருத்துதல் தீராதாயின் பொருத்து உறுபொருள் உண்டாமல் (வேறு என்ன செயற்கு உரியது)? பொரு தொழிற்கு உரியர் ஆகி, ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரியது, அம்மா!" (157). அனைவரும் அறியத் தவறு இழைத்த, கோல் கோடிய மன்னனை எதிர்ப்பது அவர்களால் நினைக்கவும் அரிது.

3.3.7. தூதரிடம் சுந்தர காண்டத்தில் காணும் அச்சத்தை யுத்த காண்டத்தில் நாம் காண்பதில்லை. பல அழிவுகளால் உண்டான இராவணனுடைய கொற்றச் சிதைவு அவர்களுக்கு மனவலிமை தந்தது போலும்! கும்பகருணன் இறந்த செய்தியைச் சீதைக்கு முன்னாலே இராவணனிடம் "பையச்" சொன்னார் (மாயா சனக-75).

அதிகாயன் இறந்த போது, தூதர் மன்னவன் அடியில் வீழ்ந்து, அழுது, "அதிகாயன் முதல்வராய கோக்குலக் குமாரர் எல்லாம் கொடுத்தனர் ஆவி" என்றார் (அதிகாயன் வதை-260-1)

3.3.8. இந்திரசித்தன் அவையிலே இராவணனை "**புந்தி இல்லாய்**" (புத்தி கெட்டவனே) என விளித்து, "மக்கள் துணை அற்றனை, இற்றது உன் வாழ்க்கை மன்னோ!" என்றான் (நாகபாச-3)

இராவணனுக்கு நேராக எதிர்ப்புத் தோன்றுவது இங்கே. வென்று மீண்ட இந்திரசித்தைப் பாராட்டி மாதர் பல்லாண்டு இசைப்பதும், அறுகு தூவி வாழ்த்துவதும் (நாகபாச-206), அவன் இராவணனை எதிர்க்கும் துணிவு பூண்டதற்காகப் போலும்.

3.3.9. தூதர் "மற்று இவர்கள் (இராம லக்ஷ்மணர்) செய்கை கேள்" எனச் சொன்ன போது, இராவணன், அவர் போர்க்களத்திலிருந்து அஞ்சி ஓடி வந்தவர்கள் என உடனே அவர்கள் மூக்கை அறுக்குமாறு கிங்கரருக்கு ஆணை இட்டான். (படைத்தலைவர் வதை-7)

3.3.10. இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன் மீது விட்டு ஊர் திரும்பியதும்,

இராவணன் உவகையன் ஆய், நகரம் களிசிறப்ப, 'விழாக் கொண்டாடுக' என்றான். ஆனால், அவ் விழா போர் வீரருடைய களி ஆட்டம் ; கள்ளின் வேகம், சோம்பல் முறிப்பு, காம வெள்ளம் இவற்றில் முடிந்தது (களியாட்டு - 1-16). உறவினரையும் நண்பரையும், இழந்த போது மக்களுக்கு விழா நுகர்வு ஏது ?

3.3.11. இந்திரசித்து இறந்தான் என்ற செய்தி ''தரும் தூதரை வாள் உருவி, மிடற்று வீசி''னான் (கழுத்தை வெட்டினான்) (இராவணன் சோக-5). செய்தி கேட்ட மக்கள் நடுங்குவார் ; பயம் சுற்றத் துளங்குவார் (3). வெற்றியில் வாழ்த்திய நகரப் பெண்கள் அவன் இறந்த பின் துயர் உற்றதைக் கம்பன் கூற வில்லை.

3.3.12. மூலபலம் அழிந்ததைக் கூறும் தூதர் ''நடுங்குகின்ற உடலினர் ; நா உலர்ந்து ஒடுங்குகின்ற உயிர்ப்பினர் ; உள் அழிந்து இடுங்குகின்ற விழியினர் ; ஏங்கினர், பிடுங்கு கின்ற உரையினர் பேசுவார்'' (இராவணன் களம் காண்-8). உயிர்ப்பு-மூச்சு; இடுங்குதல்-சுருங்குதல்.

3.3.13. இராவணன் போர்க் கோலம் பூண்டு, வில்லை நாண் தெறித்த போது, என்ன நேருமோ என்று அஞ்சிய மகளிர் ''துணுக்கம் எய்தினர்; மங்கல நாண்களைத் தொட்டார்'' (இராவணன் தேர் ஏறு-29). பெண்கள் தாலியைத் தொடுவது தம் கணவருக்குக் கேடு வராமல் காக்கும் நம்பிக் கையால்.

3.3.14. இராவணன் இறந்த பின்பு நகர மக்கள் ஏங்கியதாகவோ, அழுததாகவோ, கம்பன் கூறவில்லை.

## 4. அரசன் அவை

4.0.0. அரசன்-மக்கள் தொடர்பில் முக்கிய மான 'அவை' (மக்களும் அரசனும் தம் கருத்துக் களைப் பரிமாறிக்கொள்ளும் இடம்)க்குத் தனி இடம் தர வேண்டும்.

### (அ) அயோத்தியில்

4.1.1. தசரதன் 'மந்திரக் கிழவரை' அழைத்தான். அவர்கள் நல்ல குலத்தில் பிறந்து, கல்வியும் கேள்வியும் அவற்றின் பயனையும் எய்தினவர்; தம் நலம் அழிந்தாலும், நடுவு நிலைமை தவறாதவர்; அரசனுக்கு உறுதி பயப்பவர். தம் உயிருக்கு ஆபத்து வந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் ''தலைமகன் வெகுண்ட போதும், வெம்மையைத் தாங்கி, நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்.'' சொல் பிறழாதவர்; ''திருவின் பெட்பினர்'' (செல்வம் பொருந்தியவர்). அக்காலத்தும், வறியோர்க்கு அரசவையில் இடம் இல்லை. (மந்திர-5 9)

இவ் அவையில், அரசன் ''இராமனுக்கு அரசை நல்கி, .... வனத்தை நண்ணுவேன்—யாது நும் கருத்து?'' எனக் கேட்டான் (30) அவர்கள் 'வெருண்டு'(கலங்கி) அரசனுக்கு அதுவே உறுதி எனவும், இராமனைக்காட்டிலும் மக்களுக்கு மன்னவன் ஆகக்கூடியவன் வேறு இலன் எனவும், 'எண்ணி இசைந்தார்'' (31)

4.1 2. இராமனுடைய இசைவு பெற்றபின், வதிட்டன் அந்தணர் குழாத்தொடும் அவையி னின்று நீங்க, அங்கு இருந்த ஏனையோரிடம் தசரதன் 'ஏன் அவர்கள் இராமனை அரசனாகக் கொள்ள இயைந்தனர்?' என்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறான்( 78-82). பின்னர்,

''செம்மையின், தருமத்தின் செயலில்,
தீங்கின் பால்
வெம்மையின், ஒழுக்கத்தின், மெய்ம்மை
மேவினீர்!
என்மகன் என்பதுஎன் ? நெறியின்
ஈங்கு இவன்
நும் மகன், கையடை, நோக்கும்
ஈங்கு என்றான்'' (84)

இத்துணைப் பெரும்பண்புகள் வாய்ந்த அரசருக்கும், வீரருக்கும், செல்வருக்கும்—அந்தணர்க்கு அன்று—தசரதன் இராமனை அவருடைய மகனாகக் கருதிக் காக்கவேண்டும் என, அடைக்கலப் பொருளாகத் தந்தான்.

4.1.3. மரபு நெறி காக்கும் அயோத்திச் சமூகத்தில், அரசு மாறும் போது, இவ்வாறு 'அவை'யினரைக் கேட்பது வழக்கம் போலும்! கம்பன் காலத் தமிழ்ச் சமூக வழக்கமாகவோ, அன்றி, இவ்வாறு இனி அமைய வேண்டும் என்ற இலட்சியம் கொண்டோ, கம்பன் இவ்வாறு கூறியும் இருக்கலாம்.

4.1.4. கைகேயி கேட்ட இரு வரங்களையும், தசரதன் ஒவ்வொன்றாக, ''நின்மகன் ஆள்வான்.... தந்தேன்.... உரை குன்றேன்'', ''ஈந்தேன்

ஈந்தேன் இவ் வரம் என் சேய் வனம் ஆள'' (கைகேயி சூழ்வினை 36, 48) தந்த போது அவன் மந்திரக் கிழவரை மறந்தான்; கையடை ஆக்கியதை மறந்தான். அவர்களிடம் தன் மாற்று முடிவைக் கூறவும் கருதிலன்.

தனி ஒருவனுடைய வாய்மையைக் காத்தல் அவையினரினும், அவரிடம் தந்த அடைக்கலப் பொருளை மீட்பதிலும் உயர்ந்ததாகக் கருதப் பட்டது. இங்கு, கம்பன் தன் கருத்தைத் கவிக் கூற்றாகவும் குறிக்கவில்லை.

4.1.5 இராமனுக்கு முடிசூட்ட ''மொய்த்து அரசர் இனிது இருந்த நல் அவையில்'' வதிட்டன் ''வேந்தன் பணியினுல் கைகேசிமெய்ப் புதல்வன் பார் அளிப்பான் ஆயினுன்; இராமன் காடு உறைவான் ஆயினுன்'' (நகர் நீங்கு 88, 91) என்றதும், ''நீதி விடாது நின்று உரைக்கும் வீரர் ''ஒருமையே சொல்லும் நீரார்,'' ''இராமனின் மன்னவர் இல்லை'' என்றவர் தசரதனையோ, வதிட்டனையோ மறுத்துச் சொன்னதாக ஒரு சொல் இல்லை. அவர் ''தசரதனைப் போல் வீழ்ந்தார்.'' உயிர் பதைப்பக் கண்ணீர் கலுழ, அவர் விட்டு அழுத பேர்ஒசை ஆகாயத்தை எட்டிற்று (93).

தசரதனிடம் அவர்கள் கொண்ட அடைக் கலப் பொருள் யாது ஆயிற்று? அரசரும் வீரரும் இச் செயல் நாட்டுக்குத் தீங்கு பயக்கும் என்று கருதவில்லை; அவ்வாறு கருதி இருந்தால், ''தீங்கின் பால் வெம்மை'' உதித்து, 'மெய்ம்மை மேவி'' இருப்பர்.

4.1.6 பரதன் கேகயத்திலிருந்து திரும்பு கிருன். ''மந்திரக் கிழவர் ....சுந்தரக் குரிசிலை மரபின் சுற்றினுர்'' (ஆறு செல்-2) வதிட்டன் ''மைந்த, நீ அந்தம் இல் பேர் அரசு அளித்தி' (காப்பாயாக) எனத் ''தெரிந்து கூறினுன்'' (11). பரதன் அரசவைக்குத் தன் கருத்தைச் சொல்லுவான்(13). அவன் அரசு ஏற்க மறுத்த போது, அவனை வாழ்த்திய அவையோர், (20), முன் நிகழ்ந்தது தவறு எனக் கூறவும் இல்லை, அரசன் தவறு செய்யான்; எவன் அரசன் ஆயினும் அவனை 'மரபில் சுற்று'தல் முறை எனக் கருதிய சமுதாயத்தின் மரபில் வந்தவர் நாம்.

### (ஆ) இலங்கையில்

4.2.1 காவியத்தில், இராவணனை நாம் முதலில் பார்ப்பது ''நினைந்த எலாம் உதவும் தச்சன் (மயன்)....புனை மணி மண்டபத்தில் ''சூர்ப்பணகை சூழ்ச்சி-2). அங்கு அமைச்சர் மட்டும் அன்றி, வித்தியாதரர், கின்னரர், உரகர், தேவர், நடம் செய்வோர், பாடுவோர், மங்கையர் யாவரும் இராவணனுக்குப் பணி செய்து இருந் தனர். ஆனுல், 'மந்திரம்' எதுவும் கூறப்பட வில்லை.

இராவணன் அமைச்சரை நோக்கி, ஒரு நல்மொழி பகரினும் அவர் நடுங்கும் சிந்தையர் (9) அச்சம் அமைச்சரை ஆட்டுகிறது.

சூர்ப்பணகை இராவணனுக்குச் சீதையால் காமநோய் உண்டாக்கினுள். ''கரனையும் மறந் தான்....உரனையும் மறந்தான்....பழியையும் மறந் தான்,....வரனையும் மறந்தான்—கேட்ட மங்கையை மறந்திலாதான்'' (83). முதிர்ந்த காம நிலை யிலும், ''ஆற்லலால் அடுத்தது எண்ணும் அமைச்சரைக் கொணர்திர் என்றுன்'' (168). ''வந்த மந்திரிகள்'' என்ன சொன்னுரோ அறியோம். அவர்களோடு ''மாசு அற மரபின் எண்ணி (170) விமானத்தில் துணை ஆரும் இன்றி, மாரீசன் இருக்கை சேர்ந்தான்.

4.2.2 அயன்படையால் பிணிப்பு உண்ட அனுமனை இந்திரசித்து கொணர்ந்தது ''இராவணன் இருக்கை''க்கு; ''இருக்கை'' அவையோ என்பது ஐயுறற்கு உரியது. அங்கு அவன் ''தேவியர் குழுவிடை இருந்தான்'' (பிணி வீட்டு-65, 66).

அவ்வாறே அங்கதன் தூதும், ''இருக் கை''க்கே (அங்கதன்-14).

4.2.3 சீதை இராவணன் ''இடிப்பாரை இல் லா, ஏம்அரு மன்னன்'' (தகாத செயலைக் கடிந்து கூறுவோர் ஆகிய காவல் இல்லாத அரசன்) என இராவணனிடமே கூறுகிருள்: ''களிக்கின்றேயை (மயங்குபவனே), 'அடுக்கும் ஈது அடாது' என்று ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி இடிக்குநர் இல்லை!'' (காட்சி 136). மாரீசன், மாலியவான், வீடணன், கும்பகருணன், இந்திரசித்து எனப் பலரும் 'ஈது அடாது' எனக் காரணம் காட்டி இராவணனைத் தடுக்க முயன்றனர். தசரதன் அவையில் 'இடிப்பார்' இலர்.

4.2.4 இராவணன் மந்திரப்படலம் முதலில் அவையின் அமைப்பைக் கூறுகிறது. முனிவ ரையும், தேவரையும், மற்றும் உற்றுளோர் (தன்னுல் துன்பம் செய்யப்பட்டவர்) யாவரை யும் தவிர்த்தான். மகளிரொடு இளைஞரைப்

போக்கினுன். பண்டிதர், படையவர், கிழவர், (உரிமைச் சுற்றம்), பண்பினர், (நற்குணம் பொருந்தியவர்), மந்திரத் தலைவரை உடன் கொண்டு இருந்தான் (7, 8). செல்வர், 'திருவின் பெட்பினர்', என்று தசரதன் அவையில் கூறப் பட்ட மதிப்புச்சின்னம் இங்கு காணப்படவில்லை. (அச்சிடப்பட்ட புத்தகத்தில் ''மக்களையும், தம்பியரையும் தவிரப் பிறரைப் புறத்துப் போக்கினுன்'' (9) என்ற அடுத்த பாட்டு காணப் படுகிறது. மந்திரத்தில், மக்கள், தம்பியர் அல்லாத பிறரும் பேசுவதால், இப்பாட்டு தள்ளத்தக்கது. வண்டும் காற்றும் நுழையாத வாறு காவல் அமைத்தான் (8,10). இராவணன் தன் வீழ்ச்சியைக் கூறித் தன்னையே இகழ்ந்து மந்திரத்தைத் தொடங்குகிருன். மந்திரத்தார் பலர் அவனுடைய தளர்ச்சியை அகற்ற முன் வருகின்றனர். தம்பியரைத் தவிர, ஏனையோர் தாமே சென்று, வென்று, தலைவனுக்குப் புகழ் தருவோம் என்றனர். அரசன் மனத்தில் உள்ள தற்கு இசையப் பாடுவோர் கூட்டம் அது.

4.2.5. இராவணனுடைய அடுத்த மந்திரம் அவன் ஒற்றரை இராமன் படைவலி அறிய அனுப்பியபின், இரவில் நிகழ்வது. விளக்கு வேண்டி இருந்தமையால், உணர்வு இல் நெஞ்சி னர் (idiots), ஊமர் (dumb), உரை பொருள் புணரும் கேள்வியர் அல்லர் (deaf) விளக்கு ஏந்தினர் (ஒற்றுக்கேள்வி-41) மாலியவான் இரு முறை பேசுகிருன்; தன் நெஞ்சைத் தொளைக்கும் கேள்விகளை வரிசைப்படுத்தி (43-47,) 'சீதையை விடுதி' என முடிக்கிருன் (81.) சேனைத் தலைவன் போர் புரிந்து வெல்லுவோம் என்கிருன் (67-71). இம் மந்திரம் விடியும்வரை நடக்கிறது.

4.2 6. குரங்குப் படை நகரைச் சூழ, வாயில் களை அடைத்து, இராவணன் மறுபடியும் அமைச் சரைமந்திரத்துக்கு அழைக்கிருன்: ''உளைந்தனம் (வருந்தினேம்), என்ன எண்ணி, என் செயற்கு உரிய?'' என்ருன். (அணிவகுப்பு-11). அவன் மாலியவானைக் கடிய மற்ருெரு வாய்ப்புக் கிடைக் கிறது. இம்மந்திரமும் இரவு முழுவதும் நடக்கிறது.

4.2.7. இராவணனுக்கு உண்டாகும் தோல்வி மனப்பான்மைக்கு மாற்றுக் காண இம் 'மந்திர'ங் கள் உதவுகின்றன. அவன் போர் வீரருக்கோ, அவையினருக்கோ, ஊக்கம் தருவதில்லை; தன் தளர்ச்சியை நீக்கிக்கொள்ள அவையினருடைய ஊக்கத்தைப் பயன்படுத்திக்கொள்கிருன். தன்னிலும் வலிகுன்றியவரிடம் தன்னிலும் மிக்க உள்ளக் கிளர்ச்சியை எதிர்பார்க்கிருன். தன்னை ஒத்த வலியினரான கும்பகருணனையும் இந்திர சித்தையும், வயது முதிர்ந்த மாலியவானையும் கடிகிருன்.

### (இ) இராமன் கடற்கரையில்

4 3.1. இராமன் மந்திரம் கொள்வது ஒரு முறையே: ஒரு சூழ்நிலைக்கு முடிவு காணவே.

மயிந்தன் ''வீடணன் நால்வருடன் நம் சேனையின் நடுவண் எய்தினுன்; அருளின் வேலையை (கருணைக் கடல் ஆன உன்னை)ச் சரண் புகுந்தனன்'' என்ருன் (வீடணன் அடைக்கல-49,51). இராமன் நண்பரை ''இவன் கைப்புகற் பாலனே? கழியற் பாலனே? நீர் இயம்புவீர்'' என்ருன் (55).

சுக்கிரீவனும் (68), சாம்பனும் (74), மற்றுள மந்திரக் கிழவரும் (82) ''பற்றுதல் பழுது என முடியப் பேசினர்.'' தானை நாயகன் நீலன் ''வீடணனை ஏற்பதால் தானை அழியக் கூடும்; வெற்றி கிட்டவும் கூடும்; வீடணன் சினத்தால் வெளியேறியவன்; அவன் ஒழுக் கத்தை அறிந்து தேற நம்மால் இயலாது'' என்ருன் (81).

இராமன் மாருதியை நோக்கினுன். அவன், '''வீடணன் வரவு நல் வரவே; உன் திருவுளத் தின் குறிப்பு அறியேன்' என ''விட்டான்'' (102).

இராமன் ''நன்று, நன்று'' என, பிறரை நோக்கி, வீடணனை ஏற்றுக்கொள்வதற்கு உரிய காரணங்களைச் சொல்லி, முன்பு ஏற்க மறுத்த சுக்கிரீவனையே ஏவி, வீடணனை அழைத்துவரச் செய்தான்.

4.3.2. இந்த மந்திரத்தில் யாவரும் சமமான உரிமை உடையவராகப் பேசுகின்றனர். இராமன் தன் கருத்தை முதலில் தெரிவிக்கவில்லை. போரில் தனக்குத் துணைவராக வந்தவரது கருத்தையே அறிய விரும்பினுன். சுக்கிரீவனும் சாம்பனும் ஒரு முடிவைச் சொன்னுர் எனினும், இருவர் காரணங்களும் வேறு ஆனவை. நீலன் ஒட்டியும் ஒட்டாமலும் பேசுகிருன். அனுமன் தன் அரசனுடைய கருத்துக்கு மாறுபட்டுப் பேச அஞ்ச வில்லை.

இராமன் தன் தலைமைப் பொறுப்பை ஏற்று, வீடணனைக் கொள்ள முடிவு எடுத்தான். முடிவு எடுக்கும் வரையில் மட்டுமே விவாதம்: 'துணிந்த பின் எண்ணுவம் என்பது இழுக்கு.'

4.3.3. நாக பாசம், பிரமாத்திரம், மாயா சீதைப்படலங்களில் அவல நிலைமையும், வெற்றி கிட்டுமோ, கிட்டினாலும் அது எத்தகைய வெற்றி ஆகுமோ என்ற ஐயங்கள் எழுந்த போது இராமன் மந்திரம் கொள்ளவில்லை.

## 5. நெருக்கடி நிலையில் மக்கள்

5.0.0. மக்களுடைய பொது இயல்பு, மக்கள்-அரசன் தொடர்பு, அவைகள் - இவற்றைக் கண்டோம். வாழ்க்கையில் எதிர்பாராத மாறுதல் ஏற்படும்போது, நெருக்கடி நிலைமையில், மக்கள் செயல், சொல், எண்ணங்களைப் பார்ப்போம்.

### (அ) அயோத்தியில்

5.1.1 அரசர் அவைக்கு வதிட்டன் வந்து, இராமன் காடு உறைவதும், பரதன் பார் அளிப்பதும் சொல்ல, அச்செய்தி ஊரெங்கும் பரவியது (நகர் நீங்கு-88, 91). மற்று உள்ள மாந்தர்களும் தயரதனைப் போல வீழ்ந்தார் (92). அழுதனர் (96-100).

இவை அவர் செயல்.

5.1.2 ''கைகேசியும் கூனியும் அல்லால் கொடியார் பிறர் உளரோ?'' என்றார் (99). ''மண் செய்த பாவம் உளது; மாமலர்மேல் பெண் (இலக்குமி) செய்த பாவம் அதனின் பெரிது; விதி நெஞ்சைப் புண் செய்த; பூதலத்தோர் கண் செய்த பாவம் கடலின் பெரிது'' (101) என்றார்.

''ஆதி அரசன் அருங்கேகயன் மகள் மேல், காதல் முதிரக் கருத்து அழிந்தான் ஆம் (103). ''என்னே, நிருபன் இயற்கை இருந்தவா! தன் நேர் இலாத தலைமகற்குத் தாரணியை முன்னே கொடுத்து முறை திறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத்தால் மெய் (சத்தியம்) பிழையாதோ?'' (108). ''முறை மகன் வனம் புக, மொழியைக் காக்கின்ற இறை (மன்னன்) மனம் இரும்பு'' (191). ''பெண் கொடுவினை—அன்றி ''பெண் கொடு வினை'' (பெண்ணைக் கொண்டு காரியம்) எனவும் பிரிக்கலாம்—செய்யப்பெற்ற நாட்டில் கண் கொண்டு பிறத்தலும் இழிந்தது'' (184).

இவை அவர் சொல்.

5.1.3. மறுபடியும், சீதை (மர உரி) உடுத்து இராமன் தம்பியுடன் புறப்பட, மக்கள் விழுந்து, எழுந்து, கண்ணீரிடை அழுந்தி, துயரம் கூர்ந்தனர். சிலர் வாள் ஏந்தினர்;சிலர் தம் கண்களைத் தோண்டி எடுத்தனர். மகளிருடைய அணிகளும், அவற்றில் பதித்த மணிகளும் வீழ்ந்தன, தம்மையும் அறிகிலர் (166-172).

இறுதியில், மக்கள் அழுகையும் அவலமும் நீங்கி, சிந்தை சோர, இராமனைச் சூழ்ந்து போயினர் (229).

5.1.4. பரதன் கேகயத்திலிருந்து திரும்பிய போது, நாட்டின் அவல நிலையைக் கண்டான். மக்கள் அவனை வரவேற்றதாகவோ, பழித்ததாகவோ நாம் காண்பதில்லை. ''பாரோர் கொள்ளார்'' என்பது அவன் கைகேயியிடம் கூறுவது (பள்ளி படை-83); ஆனால், மக்கள் கொண்டார்களா? தள்ளினார்களா? கொள்ளவோ, தள்ளவோ வாய்ப்பும் பெற்றார்களா என்பன காவியத்தில் கூறப்படவில்லை.

5.1.5. ''நகரி (ஊர் மக்கள்) கை எடுத்து, பூசல் இட்டு (ஆரவாரிக்க) உயிர் துளங்குற (துடிக்க), தசரதன் உடலை யானைமேல் வைத்துச் சுடுகாட்டுக்குக் கொண்டு போனார்கள். அப்போது, ''அரச வேலை சூழ்ந்து, அழுது, கை தொழு''தது (120). மக்கள் பொது இரைச்சல் தவிர, மக்களுடைய துயரத்தை நாம் காண்பதில்லை.

இராமனைத் திருப்பிக் கொணரப் புறப்பட பரதன் முரசு அறைவிக்க, ''மா நகர் ஒல் என இரைத்தது—உயிர் இல் யாக்கை அச் சொல் எனும் அமிழ்தினால் துளிர்த்தது என்னவே'' (ஆறு செல்-22). செத்த பிணம் அமிழ்தத்தினால் உயிர் பெற்றதுபோல, ''வேந்தனைத் தரும் ஈண்டு'' என்ற சொல்லால் அயோத்தி உயிர் பெற்றது.

சித்திரகூடத்திலும், நந்தி அம்பதியிலும், இராமன் இலங்கையிலிருந்து திரும்பியபோதும் மக்கள் பங்கு ஏதும் இல்லை எனலாம்.

### (ஆ) கிட்கிந்தையில்

5.2.1. குன்றிலிருந்து குதிக்கும் சிங்கம்போல சீற்றத்துடன், வேகமாக, இலக்குவன் கிட்கிந்தையை அடைகின்றான் (கிட்கிந்தை-15, 16)

குரங்குகள் இவனை இதுகாறும் கண்டதில்லை. அவை ஓடின. சற்று நேரத்தில், எவருடைய,

ஆணையும் இன்றி, குரங்குகள் நெடுவாயிலைத் தாளிட்டு, கதவுக்குப் பின்னல் மலைகளை நிரப்பி, அடைத்தன. மரங்களை நெருக்கமாக வைத்தன. அஞ்சவில்லை. (32-34)

இளையோன் உதைக்கக் கதவும், வாயிலும், மதிலும், பாதுகாப்பும் சிதைந்தன. குரங்குகள் மலையை நீங்கிக் கானகத்துள் சிதறிப் போயின (37-40).

5.2.2 சீதையைத் தேடும் வானரர் சுயம்பிரபையின் நகரத்தைக் கண்டோ, திமிரன் வரவோ, அஞ்சவில்லை.

5.2.3 புதுச் சூழ்நிலைக்கும், அதனல் வரக்கூடிய ஆபத்துக்கும் அஞ்சாமையை யுத்த காண்டத்தில் எல்லாக் குரங்குகளிடத்தும் காண்கிறோம். கும்பகருணனையும் மூலபலத்தையும் எதிர்க்க இயலாது ஓடினர்; தடுத்த அங்கதனிடம், ''வையம் மனிதர் ஆளின் என் ? இராக்கதர் ஆளின் என்?'', ''சாமின் நீர் என்றல் தருமம் அன்று'' என்றனர் (மூலபல வதை-43, 44). இது அச்சத்தால் அன்று : போர்க்குரிய காரணம் அறியாமையால்; போர்ச் சாதனங்கள் இல்லாமையால் மூலபலத்தை இராமன் அழித்த பிறகே, குரங்குப் படை களத்துக்கு மீண்டது (வேலேற்ற 1).

5.2.4 நெருக்கடிநிலையில் அரக்கருக்குப் போலக் குரங்குகளுக்கு அச்சம் தோன்றவில்லை. பிரமாத்திரத்தால் தலைவரை இழந்த நிலைமையில், சாம்பனும் மாருதியும் தம் முயற்சியாலே செயல் தொடங்கி, மருந்து கொணர்ந்து, ''கூற்றினை வென்''றனர் ''பழியும் காத்து, அரும் பகையும் காத்து, எமை வழியும் காத்து, மரபும் காத்''தனர் (மருத்துமலை-100, 111)

### (இ) இலங்கையில்

5.3.1 அனுமன் இலங்கையில் நுழைந்ததுமுதல் அடுக்கடுக்காக நெருக்கடி நிலைகள் பல உண்டாகின்றன.

''கவல்கின்றார் ஒருவரைக் காணுத'' (ஊர் தேடு 28), ஊரில் ஒரு குரங்கு புகுந்து பல வீரரைக் கொல்கிறது. அக் குரங்கைப் பிடிக்கச் சென்ற வீரரை அவர்தம் மனைவியர், மக்கள், தாயர், மற்று யாவரும் தடுத்தனர். இதுவரை சென்ற ஒருவரும் மீண்டிலர் என்று அழுது இரங்கினர் (பஞ்ச சேனுபதிகள் வதை-14)

5.3.2 அக்கனோடு சென்றவர் பல மாயைகளால் உயிர்தப்ப முயன்றனர்; மீன், பசு, பறவை, வண்டு ஆக மாறினர்; நான் மறையவர், இளமடவார் ஆனர்; திண்டாடித் திசை அறியாது மயங்கினர்; தம் கிளைஞருக்கும் தாம் உறவினர் அன்று; வான் உலகினின்று வந்தவர் எனச் சொல்லி விட்டார் (அக்க குமாரன் வதை 39—41).

5 3. 3 வேற்றுமை ஊன்றிய சமூகத்தில், ஆண்டான் தோல்வி உற, அவனுக்குத் தாழ்ச்சி உண்டாக, அடிமை கிளுகிளுப்பான். அவனுக்கு வேறு யாரோ பரிபவம் இழைத்திருக்கலாம் ; அதைத் தாம் இழைத்த பரிபவமாக எண்ணி மகிழ்வர். ஆனல், அச்சத்தால் தம் மகிழ்ச்சியை வெளிக் காட்டார். அக்கன் இறந்தபோது, தேவரும் அழுதனர், களிக்கும் சிந்தையார் (49).

5 3. 4 அனுமனைப் பாசத்தால் பிணித்து இந்திரசித்து இழுத்து வரும்போது, ''அரக்கரும் அரக்கியர் குழாமும் அல்லவர் (மற்றையோர்) தம் கண்ணீரை மறைக்கவில்லை (பிணி வீட்டு-18), அனுமனுடைய நிலைக்கு ஏங்கினர். பலர் பயத்தினல் பதைத்துச் சிதறி ஓடினர் (9).

ஊர் எரி உண்டது. நெருப்பை எவரும் அணைக்க முற்படவில்லை. இராவணன் உட்பட, யாவரும் ஓடித் தப்ப முயன்றனர். (இலங்கை எரி யூட்டு 37). இராவணன் ஆணை இட, எழு வீரர் அனுமனைச் சூழ்ந்து, பொருது அழிந்தனர் (41, 42, 54). ஆணை இன்றி, தாமாகச் செயல் ஆற்றும் ஊக்கம் அஞ்சிய சமூகத்தில் இலது.

5 3.5 போரில் பலர் மாண்டனர். ''போன மகவு உடையார் எல்லாம் புலம்பினர்'' (அதிகாயன் வதை 274). ''இத்தொழில் யாது கொல் ?'' என இந்திரசித்து எழுந்தான் (நாகபாச 1). போர்க்களத்துக்குத் தந்தையர் வந்து மைந்தர் உடலை எடுத்துச் செல்கின்றார்; செல்லும் வழியில் உயிர் பிரிந்தது. ''உடலை வீசி, தம்மைக்கொண்டு ஓடிப்போனர் (அதிகாயன் வதை 259).

5 3.6 பிரமாத்திரத்தால் வீழ்ந்த இராமலக்குவரைக்கண்டசீதை ''அழலும்...இரங்காத அரக்கிமாரும் தனர்ந்து அழுதார்'' (சீதை களம் காண் 5)

### ஈ. வானரரும் அரக்கரும்

5.4.1 கம்பன் காவியத்தில் பொறுக்க அரிய நெருக்கடி நிலை, அவலத்தின் எல்லை, காவிய

நாயகனுக்கும் காவிய நாயகிக்கும் ஒருங்கே நிகழ்வது. இராமன் சிதையை ''சாதியால், அன்று எனின், தக்கது ஓர் நெறி போதியால்'' (செத்துப்போ, அல்லது, எங்கோபோ (மீட்சி-68) என்றது. இக் கொடுமையின் உச்ச நிலையில், அங்கு இருந்த ''முனிவரும், அமரரும், மகளிரும், நிருதரும் வானவரும்,'' என்ன செய்தனர். ''வாய் திறந்து அரற்றினர், அரோ!'' (69).

5.4.2. ''இடுதி தீ'' எனச் சீதை இளவலுக்கு வாயில் கூறினள்; இராமன் கண்ணில் கூறினன். அதை யாவரும் கேட்டனர், கண்டனர். சீதை தீ அருகில் சென்றாள். உலகமும் உயிர்களும்—அங்கு இருந்த உயிர்கள் பெரும்பான்மை வானரரும், சிறுபான்மை அரக்கரும் தாமே—ஓலம் இட்டன; ''ஐய, இச்சலம்(சினம்) தக்கிலது (தகாது) என்னச் சாற்றின (81). இது இராமனை நோக்கி. வானரரும் அரக்கரும் சொன்னது; இலக்குவன் சொல்லாதது மட்டும் அன்றி, செயலாலும் இராமனுக்கு உடைந்தையாக, ஆணை மறாது, இருந்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

## 6. தொகுப்புரை

இதுகாறும் நாம் கண்ட சமுதாயங்களின் இயல்புகள் ஆவன:

6.1. அயோத்தியும் இலங்கையும் செல்வம் நிரம்பிய சமுதாயங்கள். அவற்றுள், அயோத்தி பழைய சமூகம்; பல மரபுகளைப் பேணுவது; செல்வமும் அதன் துய்ப்பும் வன்முறைக்கு உட்பட்டவை. இலங்கைச் செல்வம் புதிது; வளருவது;அதன் துய்ப்பு வரை மீறியது. கிட்கிந்தைச் சமூகம் வரலாற்றில் பின் தங்கிய பாமரச் சமூகம்.

6.2. அரசன் குடிமக்களைக் காக்கும் கடமை பூண்டவன்; ஆனால், அவர்களுடைய மந்திரம் கேட்கும் கடமை உடையவன் அன்று. மக்களுக்குச் சமுதாய வாழ்க்கையில் போர், அரசு மாறுதல், போன்றவற்றில் மந்திரம் கூறும் உரிமை இலது.

6.3. அரசனுடைய ஆணை தவறு எனக் கருதினாலும், அவ் ஆணையை மீறவோ, எதிர்க்கவோ, செல்வச் சமூகங்களில் மக்கள் எண்ணவும் இல்லை.

6.4. அயோத்தி சமூகம் விதியை மரபை, நம்பியது; தகாதது நடந்தால் அழுதது. பொதுவாக அது வேற்றுமைகள் குறைந்த சமூகம் எனினும், அரசன் சமூகத்தலைவனாகக் கருதப் பட்டான்; அவனைச் சுற்றி இயங்கிற்று.

இலங்கைச் சமூகம் அச்சத்தால் நலிந்தது. ஆழ்ந்த வேற்றுமைகள் உள்ள சமூகம் ஆதலின், ஒரு இனத்தின் தாழ்ச்சி கண்டு மற்றொரு இனம் மகிழ்ந்தது. அரசன் ஆணை இன்றி, தாமாகச் செயல் ஆற்றும் ஊக்கம் அற்றது.

கிட்கிந்தைச் சமூகம் இயற்கையை ஒட்டியது. ''உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கம்'' உடையது. ''அரசு'' என்ற எண்ணம் வேர் ஊன்றவில்லை. பேச்சுரிமை இயல்பாகவே இருந்தது. எண்ண ஆற்றல் குறைவு எனினும், தாம் அறிந்த அளவுக்குத் தாமே எண்ணிச் செயல் ஆற்றும் துணிவு பெற்றிருந்தனர்.

6.5. தசரதன் அந்தணர், அரசர், சேனைத் தலைவர், கிளைஞர் இவரைக்கொண்டு மந்திர அவை கூட்டினன்; இராவணன் சேனைத்தலைவரையும் கிளைஞரையுமே கொண்டு கூட்டினன்; இராமன் 'நண்பரை'க் கேட்டான். சூழ்நிலை வெவ்வேறு ஆனவை எனினும், இராமன் அவையில் நிலவிய சமத்துவம் ஏனைய இரண்டிலும் நிலவவில்லை.

6.6. தசரதன் அவையினர் அரசன் சொன்னதையே ''இரட்டுறு முரசம் என்ன இசைத்ததே இசை''த்தனர் இராவணனைச் சில கிளைஞர் மறுத்துக் கூறினர். இராவணன் பிறரைச் செயலுக்கு ஊக்கவில்லை. இராமனுடைய குரங்கு நண்பருள் பலதிறப்பட்ட கருத்துக்கள் வெளிப்பட்டன.

6.7 நெருக்கடி நிலைமை உண்டாக, அயோத்தி அழுது அவலம் உற்றது. கிட்கிந்தை எதிர்க்க முயன்று இயலாமல் ஓடிவிட்டது. இலங்கை அரசன் ஆணையின்படி போர் புரிந்து அழிந்தது.

இச்சமுதாயங்களில் தோன்றும் வேற்றுமைகளுக்குக் காரணம் அவற்றின் வாழ்க்கை முறைகளில் உள்ள வேறுபாடுகள்; வாழ்க்கை முறையில் மரபு, பொருள் ஈட்டம், கல்வி-கேள்வி, அரசும் அதன் இயல்களும், உட்பிளவுகள், நீதி முதலியன யாவும் அடங்கும்.

இச் சமுதாயங்களின் ஊடு அவற்றைப் பிணைக்கும் பொதுமை ஒன்று உண்டு எனில் அது இராமன்.

# கம்மியர்கள்

ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயீல்

நம்முடைய பழந்தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் ஒரு சிக்கல் உண்டு. அதுதான் பாடபேதம் என்பது. இன்று அச்சுத்தொழில் வெகுவாக முன்னேறியிருக்கிற காலத்திலேயே அச்சுப்பிழைகள் கணக்கற்று இருக்குமேயானல் ஓலைச்சுவடிகளில் பிரதி செய்யும்பொழுது எத்தனை தவறுகள் ஏற்பட்டு இருக்கமுடியும் என்பதை இலகுவாக ஊகித்துக்கொள்ளலாம். இதுவன்றியும், தமிழ் எழுத்துகளுடைய வடிவம் இப்பொழுது நாம் காண்பது போலவே என்றும் ஒரே மாதிரியாக இருந்ததில்லை. இந்த வடிவம் காலப்போக்கில் மாறுதல் அடைந்துகொண்டே வந்திருக்கிறது. ஆகவே, ஒரு ஏட்டுப் பிரதியிலிருந்து ஒருவர் இன்னொரு ஏட்டில் பிரதி செய்யும்பொழுது, இரண்டுக்குமிடையே கடந்திருக்கும் காலத்தின் காரணமாக எழுத்து மாறுபட்டு இருக்கவும் கூடும். இதுவன்றியும், பிரதி செய்பவர் தாம் எதிலிருந்து பிரதி செய்கிறரோ அதில் காணப்படும் ஒரு எழுத்தோ, சொல்லோ சரியாக வரையப்பட்டு இருக்கிறதா என்ற சந்தேகத்தைக் கிளப்பிக்கொண்டு, அது சரியாக வரையப்படவில்லை என்ற முடிவுக்கு வந்து, தாம் அதைத் திருத்துவதாக எண்ணி, வேறு விதமாகப் பிரதி செய்துவிடுவதும் உண்டு. இப்படியாக பாடபேதங்கள் உண்டாகிவிடுகின்றன.

இன்று அச்சிட்டுப் பயில முயலும் நமக்கு எந்தப் பாடத்தை ஏற்றுக்கொள்வது என்ற சங்கடமான நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. குறிப்பிட்ட காப்பியத்தை நன்ருகப் பயின்று இருப்பவர்கள் அதன் ஆசிரியருடைய கருத்து இப்படித்தான் இருந்திருக்க வேண்டும், அப்படித்தான் இருந்திருக்க வேண்டும் என்று தாங்களே ஒரு முடிவுககு வந்து, அதற்கு ஒத்த பாடத்தை ஏற்றுக்கொள்கிருர்கள்; பிற பாடங்களை ஒதுக்கி விடுகிருர்கள். என்ருலும், ஒவ்வொரு பாடத்தையுமே சரியானது என்று நிரூபிக்க வாதங்களைக் கண்டு பிடிக்க முடியும். இத்தகைய விஷயங்களில் இதுதான் சரி, அதுதான் சரி என்று அறுதியிட்டு உறுதி கூறுவது இயலாத காரியமாவதோடு தேவையற்றதுங்கூட. பாடபேதங்கள் இவ்விப்படி இருக்கின்றன என்று சொல்லி ஒவ்வொரு பாடபேதத்துக்குமுரிய சிறப்பை விளக்கிவிட்டுப் படிப்பவர்கள் எதை ஏற்றுக்கொள்கிருர்களோ அதை ஏற்றுக் கொள்ளட்டும் என்று விட்டுவிடுவது ஒரு நல்ல முறையாகும்.

கம்பனுடைய பாடல் ஒன்றில் இத்தகைய தொரு பாடபேதத்தை இப்பொழுது பார்ப்போம்.

இராமன் சிவதனுசை வளைத்துவிட்ட செய்தி தசரதனுக்குத் தெரிவிக்கப்படுகிறது; தசரதன் தன் மனைவிமாருடனும் இரு புதல்வர்களுடனும் மந்திரிகள் படைகள் சூழ மிதிலை நகர் வந்து சேர்கிருன். ஜனகனுடைய அவைக்குச் சீதையும் அழைத்து வரப்படுகிருள்; கோசிக முனிவன் மண நாளையும் குறிக்கிருன்; அந்த நிலையில் வந்தவர்கள் அனைவரையும் ஜனகன் உபசரிக்கிருன்; அந்த உபசரிப்பில் யாவரும் மகிழ்ந்திருக்கிருர்கள்; இதனை, பால காண்டம் கடிமணப் படலம் முதலாவது பாடல் கீழ்வருமாறு உணர்த்தும்:

"இடம்படு புகழ்ச்சனகர் கோன்இனிது பேண,
கடம்படு களிற்றுஅரசர் ஆதி, இடை கண்டோர்,
தடம்படு புயத்தசிற தம்பியர்கள் காறும்
உடம்பொடு துறக்கநகர் உற்றவரை ஒத்தார்"

சென்னைக் கம்பன் கழகம் பதிப்பித்த கம்ப இராமாயணத்தில் இந்தப் பாடல் இப்படித்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பாடலுடைய பரந்த பொருளாவது:—

"விரிந்த புகழுடைய ஜனக மகாராஜன் இனிமையாக உபசரித்தலால், மதநீர் ஒழுகுகின்ற ஆண் யானைச்சேனையுடைய அரசர்கள் முதலாக இடைப்பட்ட நிலையுள்ள மற்றவர்களும், பெருமை வாய்ந்த தோள்களை உடைய சிறிய தம்பியர்வரை யாவரும், இந்த உடலோடு சுவர்க்கலோகத்துத் தலைநகரான அமராவதியை அடைந்தவரை ஒத்தார்கள்"

இந்தப் பாடலில், மூன்ருவது அடியில் இடம் பெற்றிருக்கின்ற "தம்பியர்கள்" என்ற சொல் பொருத்தமானதா என்பதுதான் இப்பொழுது நாம் பார்க்கப் புகுவது. சென்னைக் கம்பன் கழக

கம்ப இராமாயணப் பதிப்பில் இச்சொல்தான் இடம் பெற்றிருக்கிறது என்பதைக் கண்டோம். மர்ரே கம்பெனி திரு எஸ். ராஜம் அவர்களின் பதிப்பிலும், ஆழ்வார் திருநகரி கம்பஇராமாயணப் பதிப்பிலும், அண்ணாமலை சர்வகலாசாலை கம்ப இராமாயணப் பதிப்பிலும், திரு. வை மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கம்ப இராமா யணப் பதிப்பிலும் இச்சொல்லே இடம் பெற்றிருக்கிறது. ஆனால், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையப் பதிப்பில் "தம்பியர்" என்ற சொல்லுக்குப் பதிலாக "கம்மியர்" என்ற சொல் இடம் பெற்றிருக்கிறது. இந்த இரண்டு சொல்லாட்சிக்கு மிடையே உள்ள வேற்றுமையை இப்பொழுது சற்று ஆராய்வோம்.

இப்பாடலுக்கு உரை கூறும்பொழுது திரு. வை . மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் அடியிற்கண்டவாறு உரை கூறுகிறார்:—

"விரிந்த புகழுடைய ஜனகராஜன் இனிமையாக உபசரித்தலினால், மதநீர் ஒழுகுகின்ற ஆண் யானைச் சேனையையுடைய அரசர்கள் முதலாகப் பெருமை பொருந்திய தோள்களை உடைய (ஒவ்வொரு அரசகுலத்திலுஞ்) சிறிய தம்பிமார்கள் வரையிலும் நடுவிலே காணப்பட்டவர்கள் எல்லோரும் (இந்த) உடம்புடனே சுவர்க்க லோகத்து இராஜதானியான அமராவதி நகரத்தை அடைந்தவர்களை ஒத்தார்."

அண்ணாமலை சர்வகலாசாலைப் பதிப்பில் இப்பாடலுக்கு அடியிற்கண்டவாறு உரை கொடுக்கப்பெற்றிருக்கிறது: —

"மிகப்பரந்த புகழைந் தேடிய ஜனக மன்னன் இன்பமாய் வரவேற்று வேண்டிய உபசாரங்களைச் செய்தலால், மதம் பொருந்திய வேழப்படையையுடைய வேந்தர் முதல் பெருமை வாய்ந்த தோள்களையுடைய (அரசர் குலத் தோன்றல்களாய) சிறிய தம்பியர்வரை இடையில் உள்ள யாவரும், இந்த உடலோடு சுவர்க்க லோகத்துத் தலைநகரான அமராவதி நகரை அடைந்தவரைப் போன்றார்."

இந்தப் பாடலையும் இந்த உரைகளையும் கூர்ந்து நோக்கும்பொழுது, "தம்பியர்கள்" என்ற சொல் பொருத்தமாக இந்தப் பாடலில் இடம் பெற்று இருக்கிறதா என்று சிந்திக்க வேண்டியுள்ளது. நம்முடைய வழக்கில், 'ஒன்றிலிருந்து இன்னொன்றுவரை' என்று சொல்லும்பொழுது இரண்டுக்குமிடையே இருக்கும் இடைவெளி நீண்டு இருக்க வேண்டும். மிகச் சமீபத்தில் இருக்கின்ற இரண்டைக் குறிப்பிடும் பொழுது, 'அதி முதல் இதுகாறும்' என்றோ, 'அதிலிருந்து இது வரை என்றோ' கூறுகின்ற வழக்கமில்லை. இங்கே ஜனக மகாராஜனுடைய உபசரிப்பானது எத்தகையதாக இருந்தது என்றால், மிக உயர்ந்தவர்களிலிருந்து மிகத் தாழ்ந்தவர்கள் வரையிலும் ஒரே மாதிரியாகத் தாங்கள் உடம்போடு சுவர்க்க லோகத்தை அடைந்துவிட்டதாக எண்ணுமாறு இருந்தது என்று கவிஞன் கூறுகிறான். ஆக, மிக உயர்ந்த அந்தஸ்தில் உள்ளவர்களை ஒரு எல்லையாகவும், மிகக் குறைந்த அந்தஸ்தில் உள்ளவர்களை மற்றொரு எல்லையாகவும் கவிஞன் குறிப்பிடுகின்றான் என்பதில் ஐயமில்லை. "அரசர் ஆதி" என்பது உயர்ந்த எல்லையைக் குறிக்கிறது. "தம்பியர்கள்காறும்" என்பது தாழ்ந்த எல்லையைக்குறிக்கிறது. அப்படியானால், "தம்பியர்கள்" என்ற சொல்லைப் பயின்று அரசர் குலத் தோன்றல்கள் என்று பொருள் கொள்வது பொருத்தமாகுமா? பொருத்தமாகாது என்பதற்கு நான்கு காரணங்களைச் சொல்லமுடியும். ஒன்று, "அரசர் ஆதி" என்ற சொற்றொடரில் இடம் பெற்றிருக்கும் "அரசர்" என்ற சொல்லே அரசர் குலத் தோன்றல்களையும் தன்னுள் அடக்கிக்கொள்ளும். இரண்டு, அரசர் குலத் தோன்றல்கள் கீழ்மட்டத்து எல்லையைக் குறிப்பிடுவதாகக் கொள்ள முடியாது. மூன்று, அரசருக்கும் தம்பியர்க்கும் இடையே "இடை கண்டோர்" இடம் பெற்று இருக்கிறார்கள். அத்தகையவர்கள் அரசருடைய அந்தஸ்துக்குக் குறைந்தவர்களாயும் அரசர் குலத் தோன்றல்கள் என்று பொருள் கொள்ளும் தம்பியர்களுக்கு அந்தஸ்தில் உயர்ந்தவர்களாவும் இருக்க வேண்டும் அப்படி யாரையும் குறிப்பிடுவதற்கில்லை. நான்கு, "தம்பியர்கள்" என்ற சொல்லுக்கு முன் "சிறு" என்ற அடைமொழி இடம் பெற்றிருக்கிறது. "தம்பியர்கள்" என்ற சொல்லே வயதில் குறைந்தவர்களைக் குறிக்கும். அப்படியானால், அடைமொழியாக இருக்கும் "சிறு" என்ற சொல், வேறு சிறுமையைக் குறிக்க வேண்டும். அரச குலத் தோன்றல்களோடு அத்தகைய சிறுமையைக் குறிப்பதற்கில்லை. வந்து இருக்கும் அரசர் குலத்தோன்றல்களோ இராமனுடைய திருமணத்தைக் காணத் தசரதனோடு வந்தவர்கள். அத்தகையவர்கள்மேல் வேறு ஒரு சிறுமையை ஏற்றுவது பொருந்தாது. இத்தகைய காரணங்களினால் இப்பாடலில் இடம் பெற்றிருக்கும் "தம்பியர்கள்" என்ற சொல் பொருந்தாது என்ற முடிவுக்கு வரலாம். இந்தப் பொருத்தமற்ற தன்மையிலிருந்து தப்பித்துக்

கொள்வதற்காகத் தம்பியர் என்ற சொல்லுக்கு வேறு பொருள் கொடுப்பதற்கும் வழி இல்லை. ''தம்பி'' என்ற சொல் இளைய சகோதரனைக் குறிக்கும். இல்லாவிட்டால் வயதில் சிறியவன் ஒருவனை அன்னியோன்னியமாகக் குறிக்க உதவும். மற்றபடி வேறு எந்தப் பொருளையும் அந்தச் சொல்லுக்குக் கொடுக்க முடியாது.

அந்த நிலையில்தான் ''தம்பியர்'' என்ற சொல்லுக்குப் பதிலாகக் ''கம்மியர்'' என்ற சொல்லை இப்பாடலில் அமைத்துப் பார்க்க வேண்டும். ''கம்மியர்'' என்ற தமிழ்ச் சொல்லுக்குத் 'தொழிலாளி' என்ற பொதுப் பொருளோடு, 'கம்மாளன்', 'நெசவாளி' என்ற சிறப்புப் பொருள்களும் உண்டு. இங்கே அரசர்களை உயர்ந்த மட்டத்து எல்லையாக வைத்து, கவிஞன் பாடுவதால், தொழிலாளிகளைத் தாழ்ந்த மட்டத்து எல்லையாக வைத்து, கவிஞன் பாடுவதாகக் கொள்வது பொருத்தமாவதோடு மரபு வழி நிற்பதாகவும் ஆகும். தசரதனையும் அவனுடன் வந்தவர்களையும்தான் ஜனகன் உபசரிக்கிறான். தசரதனையும் அவனுடன் வந்த அரசர் பெருமக்களையும் ஜனகன் பெருத்த அளவில் உபசரித்து, அதன்காரணமாக அவர்கள் சுவர்க்க லோக இன்பத்தை அனுபவித்தார்கள் என்று சொல்வதில் சிறப்புமில்லை; நயமுமில்லை. ஆனால், தசரதனோடு வந்தவர்களில் மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள்கூட மிகச் சிறப்பாக உபசரிக்கப்பட்டு அவர்கள் சுவர்க்க லோக இன்பத்தை அனுபவித்தார்கள் என்பதில் தான் சிறப்பும் நயமும் இருக்கின்றன. இப்படிச் சொல்வதில் தசரதனோடு வந்த அனைவரையுமே எந்தவித வேறுபாடுமின்றி ஜனகன் உபசரித்த தனால் யாவருமே சுவர்க்க லோக இன்பத்தை நுகர்ந்தார்கள் என்று கவிஞன் சொல்லி விடுகிறான். ''கம்மியர'' என்ற சொல் தொழிலாளி என்று பொருள்படும் என்பதைக் கண்டோம். ''சிறு'' என்ற அடைமொழியைக் ''கம்மியர்கள்'' என்ற சொல்லின் முன் சேர்ப் பதன் மூலம் கவிஞன், வந்த தொழிலாளிகளுள் பெருந்தொழில் செய்பவர், சிறு தொழில் செய்பவர் என்ற வேறுபாடு இல்லாமல், சிறிய தொழில் செய்யும் தொழிலாளிகள்கூட ஜனகனுடைய உபசரிப்பினால் சுவர்க்க லோகத்து இன்பத்தை நுகர்ந்தார்கள் என்பதை வற்புறுத்துகிறான். மேலும், மூன்றாவது அடியின் ஆரம்பத்தில் இடம் பெற்றிருக்கும் 'தடம் படு திறத்த' என்ற சொற்கள் ''சிறு தம்பியர்கள்'' என்ற சொல் ஆட்சியோடு பொருந்துவதைவிடச் ''சிறு கம்மியர்கள்'' என்ற சொல்லாட்சியோடு மிகச் சிறப்பாகப் பொருந்தும். இங்கு ஜீவக சிந்தாமணியில் ஓர் ஆட்சியும் நோக்கத்தக்கது:—

'' இம்மியன நுண்பொருள்கள் ஈட்டி நிதி யாக்கி
கம்மியர் ஊர்வர் களிறு ஓடைமுதல் சூட்டி''

*(ஜீவக சிந்தாமணி - 495)*

இவ்விரண்டு அடிகளின் பொருள், என்னவென் றால் பிறர்க்குத் தொழில் செய்கின்றவரும் சிறிய பொருள்களைத் தேடிப் பெரிய பொருளாக்கி, அத னால் யானையின் நெற்றியிலே முகபடாம் அணிந்து ஏறிச் செல்வர் என்பதாகும். இங்கு இடம் பெற்றிருக்கும் ''கம்மியர்'' என்ற சொல்லுக்கு பிறருக்குத் தொழில் செய்வோர் என்ற பொருள். இந்தக் கம்பன் பாடலிலும் இச்சொல் அரசர்க்கும் இடை கண்டோர்க்கும் தொழில் செய்வோரைக் குறிப்பதாகும். எனவே, இப்பாடலில் ''தம்பியர் கள்'' என்ற சொல்லுக்குப் பதிலாகக் ''கம்மியர் கள்'' என்ற சொல்லே பொருளிலும் நயத்திலும் சிறந்து நிற்பதைப் பார்க்கிறோம்.

இப்பொருளே பொருத்தமுடையது என்பதைக் கம்பனுடைய வேறு இரண்டு பாடல்களிலிருந்தும் காணலாம். வனத்துக்குச் சென்றுவிட்ட இராமனைத் திரும்ப அழைத்துக் கொண்டுவந்து முடி சூட்ட வேண்டும் என்ற எண்ணத்தோடு உற்றார், உறவினர், மந்திரிகள், படைகள் சூழ வனத்துக்குச் சென்ற பரதனை பரத்துவாசர் உபசரிக்கிறார். அதனைக் கூற வந்த கவிஞன்:

'' ஏந்து செல்வத்து இமையவர் ஆம்என,
கூந்தல் தெய்வ மகளிர்கொண் டாடினர்
வேந்தர் ஆதி சிவிகையின் வீங்குதோள்
மாந்தர் காறும் வரிசை வழாமலே''.

(அயோத்தியா காண்டம், திருவடிசூட்டுப் படலம் - *12)*

இந்தப்பாடலின் பொருள்என்னவென்றால்கூந்தல் அழகில் சிறந்த தேவமாதர் அரசர்கள் முதல், பல்லக்கு சுமத்தலால் தோள்கள் வீங்கிக் காய்ப் பேறிய ஆட்கள்வரை அனைவரையும் முறைமை தவறாமல் மிக்க செல்வத்தையுடைய தேவர்களைக் கொண்டாடுவது போலவே பாராட்டி உபசரித்த னர் என்பதாகும். நாம் இங்கு குறித்து நோக்கத் தக்கது கடைசி இரண்டு அடிகள்தாம். முந்தின பாடலில் ''அரசர் ஆதி'' என்ற சொல்லாட்சியைக் கண்டோம். இப்பாடலில் ''வேந்தர் ஆதி'' என்ற

சொல்லாட்சியைக் காண்கிறோம். பொருளில் வேற்றுமை இல்லை. கீழ்மட்ட எல்லையாக இப்பாடலில் கவிஞன் எடுத்துக்கொண்டிருப்பது ''சிவிகையின் வீங்கு தோள் மாந்தர்.'' அதாவது, பல்லக்கில் பிறரை வைத்துச் சுமந்து செல்பவர்களை. முந்தின பாடலின் கருத்தோடு இக்கருத்தும் மிக அற்புதமாகப் பொருந்தி இருப்பதைப் பார்க்கிறோம். அங்கு ஜனக மகாராஜனுடைய உபசாரம். அவன் வெறும் அரசன் மாத்திரமல்ல, இல்லறத் துறவியுங்கூட. இங்கு பரத்துவாச முனிவருடைய உபசாரம். இந்த இரண்டு உபசாரத்துக்கும் வேறுபாடு இருப்பதற்கு நியாயமில்லை. ஆகையால், அந்தப் பாடலில் ''உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார்' என்று பாடினான்; இந்தப் பாடலில் ''ஏந்து செல்வத்து இமயவர் ஆம் எனக் கொண்டாடினர்'' என்று பாடுகிறான்.

இதற்கிடையில், இப்பாடலில் உள்ள மற்றொரு சிறப்பையும் பார்க்கலாம். கம்பன் திருவள்ளுவரிடத்து பெருமதிப்புக் கொண்டிருந்தான். குறள் கருத்துகளையும் ஆட்சியையும் தன்னுடைய காப்பியத்தில் பரவலாக ஆண்டிருக்கிறான் என்பது எல்லோரும் அறிந்ததே. இப்பாடலில் சிவிகை தூக்குவோரைக் கீழ் மட்டத்துக்கு எல்லையாகக் குறிப்பிடுகிறான் என்பதைக் கண்டோம். இது திருக்குறள் ஆட்சியேயாகும்.

''அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை''

என்பது குறள். பல்லக்கைச் சுமந்து கொண்டு போகிறவனுக்கும் அதில் அமர்ந்துகொண்டிருப்பவனுக்கும் இடையிலுள்ள வேறுபாடு என்னவென்று சிந்தித்துப் பார்த்தால் அறம் செய்வதன் பலன் என்னவென்பதை யாரும் சொல்லி உணர்த்தத் தேவை இல்லை என்பது இக்குறளின் பொருள். இதில் பல்லக்குச் சுமப்பவனின் நிலையைக் கீழ்மட்டத்தின் எல்லையாக வள்ளுவர் குறிப்பிடுகிறார். கம்பன் அதை எடுத்தாண்டுவிடுகிறான்.

மற்றொரு பாடலும் பரத்துவாச முனிவருடைய உபசாரத்தைப்பற்றியதுதான். இராவண வதத்துக்குப்பின் இராமன் சீதையோடும் பிறரோடும் திரும்பி வரும்பொழுது பரத்துவாச முனிவன் அவர்களை உபசரிக்கிறான். அந்த உபசாரத்தைக் குறிப்பிடும் கம்பனும் :

''அரைசரே ஆதியாக, அடியவர் அந்தமாக''
*(யுத்த காண்டம், மீட்சிப்படலம் -199)*

என்று பாடுவான். இங்கு ''அரசர்'' என்ற சொல் ''அரைசர்'' என்று வந்திருக்கிறது என்பதைத் தவிர, முற்பாடலில் கண்ட ''அரசர் ஆதி'' என்பதற்கும், இதற்கும் வேறுபாடில்லை. கீழ் மட்டத்தின் எல்லையாக ''அடியவர்'', அதாவது, அடிமைகளைக் குறிப்பிடுகிறான்.

இவற்றையெல்லாம் பார்க்கும் பொழுது நாம் முன்னர்க் கண்ட பால காண்டப் பாடலில் 'கம்மியர்கள்'' என்ற பாடமே பொருத்தமாக இருக்கும் என்ற கொள்ள வேண்டியிருக்கிறது

# இராவணனைப்பற்றி ஷேக்ஸ்பியர்...!

அ. அறிவொளி

ஷேக்ஸ்பியர் படைத்த மார்க ஆண்டனிக்குப் பத்துத் தலைகளும் இருபது கைகளும் இருக்கவில்லைதான்; ஆனால், இராவணனின் பேராண்மை அல்லது தறுகண்மை ஆண்டனியிடமும் இருக்கவே செய்தது.

'முக்கோடி வாழ்நாள் — மயன்றுடைய பெருந்தவம்— எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக் கொடுத்த வரம்'—இவைகள் கம்பனின் இராவணனுக்கு வரவு வைக்கப்பட்ட மூலதனங்கள் அல்லவா? இப்படிச் சில வரவுகள் ஆண்டனிக்குங்கூட இருந்தன.

ஹெர்குலிஸ் என்னும் வரபல மாவீரனின் கால்வழியாளன்— போராகிய வாகை மாலை (Garland Of war)— உரோமானியப் பேருலகின் முத்தூண்களில் ஒரு தூண் (one of the TRIPLE PILLARS of the world) என்ற பாராட்டுகள் மட்டுமல்ல, அவன் தோல்வியை நிலமகள்கூட விரும்பாமல் அதிர்ச்சியால் தெரிவித்ததாகக் காணுகிறோம்.

வீரத்தால் மட்டுமா இந்த வைரமலைகள் ஒன்றுபடுகின்றன? இல்லை: காமத்தால் கெட்டழியும் கழிவிரக்கத்தாலும் இவர்கள் ஒன்றுபடுகிறார்கள்.

சீதைக்காக இராவணன் விலைமதிப்பற்ற எவற்றையெல்லாம் இழந்தானே அவற்றையெல்லாம் ஆண்டனி கிளியோபாட்ராவின் காதலுக்காகவே இழந்தவனாகிறான்.

சீதையை அனுபவிக்க முடியாமல் இராவணன் இழந்தான். ஆனால், ஆண்டனி கிளியோபாட்ராவை அனுபவித்தே இவைகளை இழந்தான்.

சீதைக்காகச் சிறந்த பொருள்களை இழக்கும் போதெல்லாம் கண்களைத் திறந்துகொணடே இழந்தான் இராவணன்! ஆண்டனியோ, கண்களை மூடிக்கொண்டே இழந்தவனாகிறான். ஒரு முத்தத்திற்கு விலையாக ஒரு நாட்டையே கொடுத்தவன் ஆண்டனி. (He kissed away kingdoms). சரியென்று சீதை உடன்படக்கூறும் ஒரு சொல்லுக்கு மூன்று உலகையுமே பலியிடத் தயாராக இருந்து ஏமாந்தவன் இராவணன்.

காமதேவனின் கடுங்கணைகளால் காய்ப்பேறிய இந்தக் கருங்கல் மேனியர், தம் வாழ்விலேயே முதன் முறையாகத் தோற்றுத் திரும்பிய இடமொன்று உண்டு. அதனை ஷேக்ஸ்பியரில் படிக்கும் போது கம்பன் எழுதியது போல் உள்ளது. அதனையே கம்பனில் படிக்கும் போது ஷேக்ஸ்பியர் எழுதியது போல இருக்கிறது.

தன்வயிற்றுக்கு உணவாகிவிடும் மானிடப் பிஞ்சினிடத்தில் முதல் நாள் தோற்றுப்போன இராவணன் 'இன்று போய் நாளை வா' என்று அனுப்பப்பட்ட நிலை ஷேக்ஸ்பியர் எழுதியதாம்.

ஆண்டனியைவிட இளையவன் ஆண்டனியாலேயே அரசனாக்கப்பட்ட சிறுவன் ஆம்-அந்த ஆக்டேவியஸ் சீசர்ஸ் கடற்படைப் போரில் ஆண்டனியைத் தோற்கடித்துவிட்ட நிலை கம்பன் எழுதியதாம்.

தரைப்படையில் மட்டுமே வல்லமை கொண்ட ஆண்டனி, கடற்படைக்கு ஒத்துக் கொண்டது தவறா? துணைவர்கள் எடுத்துக் கூறியும் பொருட்படுத்தாமல் கிளியோபாட்ராவைப் போர்க்களத்திற்கே அழைத்துப் போனது குற்றமா? பயத்தால் அந்தப் பளிங்கு மேனியாள் பாதிப் போரில் புறமுதுகு காட்டி ஓடியது பிழையா? அவளின் கூந்தல் முடிப்புக்குத் தன் உயிரையே கயிறாக உதவிய காரணத்தால் அவளைப் பிரிய முடியாமல் ஆண்டனியும் புறமுதுகு காட்டி ஓடினானே அதுதான் பழிப்புக்குரியதா?— இப்படியெல்லாம் துணைவர்களும் பகைவர்களும் குழம்பிக்கொண்டிருக்கும் நேரத்தில் ஆண்டனி எங்கே? எங்கே?

நீண்ட மண்டபம்; அது வெறிச்சோடிக்கிடக்கவில்லை என்பதற்கு அடையாளமாய் அங்கே ஆண்டனிமட்டுமே அமர்ந்திருக்கிறான். நெடிய தூண்கள் மட்டுமே அவனை விழித்துப் பார்க்கின்ற தனிமை அது.

''கிளியோ! உன்னால் அல்லவா இந்தத் தோல்வியை அவர் பெற்றார்? போ! போய்

அவரை அமைதிப்படுத்து'' என்று கிளியோபாட்ராவின் தோழி தூண்ட, இருவருமாக அங்கே வருகிறார்கள்.

பாண்டியநாட்டு முத்துகளைச் சாராயத்தில் கலக்கி ஆண்டனி அவளுக்கு வாயில் ஊற்றிய போது எப்படிப்பட்ட மோகன வார்த்தைகளால் அவனை அழைத்தாளோ அதைவிட ஆனந்த மயமான அழைப்பு மொழிகளை இப்போது கிளியோபாட்ரா அனுப்புகிறாள். அவன் காதுகள் செவிடாகவில்லை! ஆனால், அவைகளுக்கு அவன் மறுபேச்சே பேசவுமில்லை.

கொதிக்கும் கோபமா? அந்தக் குளிர்பதன கோமளத்திடமா அவனுக்குக் கோபம் வரும்? இதோ.... மெல்ல மெல்லப் பேசுகிறான்.

''YES MY LORD! HE AT FILLIPPY KEPT HIS SWORD EVEN LIKE A DANCER''

''என்னுடைய தலைவரே! ஆமாம்! அவன் பிலிப்பி எனும் இடத்தில் நடந்த போரில் நாட்டியக்காரி வாளைப் பத்திரமாக வைத்து ஆடுவது போல் இவனும் போர்வாளை வைத்திருந்தான்''— இது தான் கிளியோபாட்ரா அழைத்த அழைப்புக்கு ஆண்டனி அளித்த மறுமொழியாகும்.

YES (ஆமாம்) என்று சொல்லிச் சிறிது ஆண்டனி நிறுத்தும் போது, அவன் கிளியோபாட்ராவிற்குப் பதில் பேசுவது போல நாமும் நினைக்கிறோம். கிளியோவும் அவ்ள் தோழியும் நினையாமல் இருந்திருக்க முடியுமா?

My Lord (என் தலைவரே) என்று அவன் அழைத்த போது அது கிளியோவை அழைத்ததாக இருக்க முடியாதே! கேலிக்காகக் கிளியோவை இப்படி அழைத்திருந்தால் அந்த உணர்வு அவன் பேச்சில் எங்குமே காணப்படவில்லையே! எனவே, அவன் கிளியோவின் பேச்சுக்குப் பதில் கூறவில்லை என்றாகிறது. My Lord என்று அழைக்கும் தகுதி படைத்த எவரும் அந்த மண்டபத்தில் இல்லை. பிறகு ஏன் இப்படிப் பேசுகிறான்? ஆம், இங்கப் பேச்சைக் கம்பனல்லவா அங்கே போய் எழுதிவிட்டான்!

ஜூலியஸ் சீசரைக் கொன்றுவிட்ட கூட்டத்தாரோ போர் செய்த இடம்தான் பிலிப்பி என்பது. அதுதான் ரோமானிய மகுடத்துக்கு விலையாக நின்றது அந்தப் போரில் வாள்கூடப் பிடிக்கத் தெரியாமல் நாட்டியக்காரியின் வாளாண்மையைச் செய்துகொண்டிருந்தானும் ஆக்டேவியஸ் சீசர்! ஆனால், அன்றைககு ஆற்றலைக் காட்டிய ஆண்டனி, ரோமானிய மகுடத்தை ஆக்டேவியசுக்குச் சூட்டிவிட்டான். இந்தப் பழைய கதையை இங்கு யார் கூறுகிறார்கள்?

ஆண்டனியை வழிநடத்தும் குலதேவதை அல்லது கடவுள் கேட்கிறாராம், ''அந்தச் சிறுவன் ஆக்டேவியசிடமா தோற்றுப்போய்விட்டாய்?''— என்று! அந்தத் தெய்வத்தின் கேள்விக்குத்தான் இப்போது YES (ஆமாம்) போட்டானே தவிர கிளியோவின் அழைப்புக்கு அல்ல! அதனால் தான் MY LORD என்றும் அவன் பேசுகிறான்.

தோற்றுவிட்ட அவலத்தில், அவன் அருகே இருக்கும் எல்லாப் பொருளையும் மறந்து விட்டான். அருமைக்காதலி அழைக்கும் அமுத ஒலியும் அவன் காதில் விழவில்லை. அவள் பேரழகும் உடையணியும் கண்ணில் படவில்லை! அவனுடைய ஐந்து பொறிபுலன்களும் இவ்வுலகிலே எதனோடும் ஐக்கியமாகவில்லை. அதற்குப் பதிலாக உள் மனத்திலிருந்து வெளியில் குதித்த தெய்வத்தோடு கலங்கிக் குழம்பித்தான் இவைகளைக் கூறுகிறான்.

இராவணன் தோல்வி இலங்கை முழுதும் காற்றில் பரந்தது. தந்தையின் தோல்வி நீக்கித் தோள்கொடுக்க வரும் பிள்ளைமாரையும், கவலைக் கடலை விட்டுத் தமது காவலனை மீட்க வரும் சேனைக் கடலையும், ஓங்கு மாடங்களையும், உலகின் திசைகளையும், இராவணனின் கண்களும் காதுகளும் கவனிக்கவில்லை.

இருக்கலாம்; மோசமொன்றுமில்லை. தம்முடைய கணவன் தோல்வியை மலரால் மணத்தால் உடையால் ஒளியால் மதுவால் மாற்றிவிட முடியுமென, அணியணியாக அழகுமங்கலங்களோடு வந்த இராவணன் துணைவியரை, அவர்களின் சிலம்போசைச் சிலிர்ப்பை, வளையோசை நளினத்தை, வாயமுத தேன் கலவையை, அவன் கேளாமல், பாராமல் அறியாமலே போனானே! தலைகுனிந்தே நடந்தானே! ஏன்?

ஆண்டனிக்கு எப்படி ஐந்து புலன் பொறிகளும் செயலிழந்து போய்விட்டனவோ அப்படித்தான் இராவணனுக்கும்! அடடா! அவன் இந்த நிலமகளைத் தன்னுடன் சேர்த்து மணந்துகொள்ளச் செய்த போர்கள்தாம் எத்துணை?

எந்த நெஞ்சில் சீதையைச் சிறைவைத்தானோ அதற்கும் அடித்தட்டிலே கிடந்த நிலமகள்!

நெடுங்காலமாய் நெஞ்சிற்கிடந்த பூமகள்! இப்போது அவனுடைய புலன்களில் வந்து கூத்தாடுகிருள். ''என்னை மணக்க நீ சுமந்த வடுக்களின் தொகை எவ்வளவு ?'' என்று கேட்கிருள் ?

'ஐயோ, என்னை விட்டுப் பூமகளே நீயும் போய் விடுவாயோ ?' என்று இரங்கிப் போய்க் கூனிக் குறுகி இந்தப் பூமகளைப் பார்க்கிருனும் அதனுல் தான் அவனுக்கு யாரையுமே தெரியவில்லையாம்.

''மாதிரம் எவையும் நோக்கான்
வளநகர் நோக்கான் பெற்ற
காதலர் தம்மை நோக்கான்
கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் கோதை மாதர்
தனித்தனி நோக்கத் தான்அப்
பூதலம் என்னும் நங்கை
தன்னையே நோக்கிப் புக்கான்.''

ஆண்டனியும் இராவணனும் முதலில் பெற்ற தோல்வியில் செயலிழந்து போனதை இருகவிஞர் களும் வேறு ஏதோ ஒரு கற்பனைச் சஞ்சாரத்தில் இரு வீரர்களையும் பறக்க விட்டுவிட்டார்கள். உலகியலில் அவர்களை ஊமையாக்கிவிட்டார்கள். இருவரும் நாடு, மொழி, காலம் முதலிய கட்டுகளைக் கடந்தாலும் கவித்துவம் என்னும் அமுதப் பேழையில் இருவருமே சங்கமம் ஆவதனைக் காணுகிரும். தோள்கள் பூரிக்கவில்லையா ? இதுகண்டு, நெஞ்சின் அலைகள் நினைவுவீணையாக வில்லையா ?

# மீனும் தேனும்

க. வே. இராமநாதன், பள்ளத்தூர்

கவிச்சக்கரவர்த்தி கம்பன் இராகவன் புகழைச் செவிக்குத் தேனாக நமக்குத் தரப் பல இடங்களில் மூல நூலிலிருந்து மாறுபட்டதுண்டு. சீதையைத் தசமுகன் தூக்கிச் சென்றது; வாலியின் மறைவுக்குப்பின் தாரையின் கோலம் போன்றவற்றைப் பெரிதும் மாற்றியமைத்துள்ளான் கம்பன்.

அகலிகை, தாரை, சீதை, மண்டோதரி போன்ற பெண் பாத்திரங்களின் பெருமையை உயர்த்தும் இடங்களிலேயே மாற்றம் செய்திருப்பதைப் பலரும் எடுத்துக் கூறுவர். இராமனது சௌலப்யத்தை உயர்த்திக் காட்டவும் கம்ப நாடுடைய வள்ளல் செய்த ஒரு திருத்தத்தைக் குறிப்பிடுவது இக்கட்டுரையின் நோக்கமே தவிர, ஆதி கவியான வான்மீகி முனிவரைக் குறைத்துக் கூறிக் கம்பனை ஏத்துதல் நோக்கமன்று. கவிச்சக்கரவர்த்தியே வான்மீகி முனிவனை ''வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி'' என்றும், இந்திரசித்துடன் சென்ற படைத்தொகையை அளவிட்டுரைக்க ''என்னலும் அரிதேனும் இயம்பு வான்மீகன் என்னும் நல்நான் மறையான் 'அது நாற்பது வெள்ளம்' என்னச் சொன்னான்; பிறர் யார் அஃது உணர்ந்து தொகுக்கவல்லார் என்றும் மதிப்புடன் பேசுவான்.

தாயுரைகொண்டு தாதை உதவிய தரணி தன்னைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு வனவாசம் மேற்கொண்டு கங்கைக் கரைக்கு வந்த இராமனைக் குகன் சந்திக்கிறான். இராமனை குகன் முன்பே அறிந்தவனென்றும் இராமனது உயிர்த்தோழனென்றும் வான்மீகி கூறுகிறார்.

> ''தத்ர ராஜா குஹோ நாம ராமஸ்ய
> ஆத்ம ஸமஸ் ஸகா''

குகன் வரும்போதே இராமனைக் கட்டித் தழுவிக் கொண்டதாக வான்மீகி கூறுகிறார்.

> ''தம் ஆர்த்தஸ் ஸம்பரிஷ்வஜ்ய
> குஹோ ராகவ மப்ரவீத்''.

இத்தகைய உயிர்த்தோழனான குகன் இராமனைக் காண மதுவர்க்கம் முதலிய தேன் கலந்த உணவுப் பொருள்களோடு வந்து, அவ்வெளிய உணவுப் பொருள்களை ஏற்றுக்கொள்ளுமாறு இராமனை வேண்டுகிறான். ஆனால், இராமன் அவற்றை ஏற்க மறுத்துவிடுகிறான். வனவாச காலத்தில் யாரிடமும் எவ்விதப் பிரதிக்கிரகமும் கொள்வதில்லை என்று கூறிவிடுகிறான்.

> ''யத் த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா
> ஸமுபகல்பிதம்
> ஸர்வம் ததது ஜாநாமி நஹி வர்த்தே
> ப்ரதிக்ரஹே''
>
> (வால்மீகம்-அயோத்யா-50)

பொதுவாக, ப்ரதிக்ரஹம் என்ற வட சொல் தனம், தான்யம், வஸ்திரம் போன்ற பொருள்களையே பெறுவதையே குறிக்கும். இங்கு குகன் எளிய தேனும் மீனும்தான் உண்ணக் கொண்டு வந்தான். உடனிருந்த முனிவர்களைத் திருப்திப் படுத்தவோ வேறென்ன காரணத்தாலோ குகனிடம் அவ்வாறு கூறிவிட்டான். இவ்வாறு குகனிடம் கூறிய இராமன், சபரி தந்த உணவை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டதாகவும், முனிவர்கள் அளித்த விருந்தை ஏற்றுக்கொண்டதாகவும் வான்மீகி கூறுகிறார். நமக்கு இவ்விடத்தில் ஒரு குழப்பம்-குகன் கொணர்ந்த உணவுப் பொருள்கள், 'ப்ரதிக்ரஹம்' என்றால் சபரியும் முனிவர்களும் கொடுத்ததை ஏற்றதும் 'ப்ரதிக்ரஹம்' பெற்றதுதானே? ஒருகால், இராமனும் ஜாதி உயர்வு தாழ்வு பார்த்துவிட்டானோ, என்று எண்ண இடமில்லை. குகன் வேடனென்றால், சபரி வேட்டுவச்சிதானே! ஏன் இராமன் குகனிடம் இவ்வாறு நடந்துகொண்டான்? இது இராமனது சௌலப்யத்திற்குப் பொருந்தவில்லையே! இராமன் சிறிது நாகரிகக் குறைவாய் நடந்துகொண்டுவிட்டானோ! என எண்ணத் தோன்றுகிறது. வான்மீகியின் இராமனது இச்செயல் குகன் கொணர்ந்த மீனைப் பார்த்த முனிவர்கள் முகம் சுளித்த மாதிரி நம்மையும் முகம் சுளிக்க வைக்கிறது.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் காட்டும் இதே காட்சியையும் காண்போம். அது குகன் கொணர்ந்த தேனாய் நம் செவியிலும் சிந்தையிலும் என்றென்றும் இனிக்கிறதே!

கம்பன் படைத்த குகன் இராமனை அப் பொழுதுதான் முதன் முதலாகக் காண வருகின்றான். இராமன் யாரென்று தெரியாத தால் ஆசிரம வாசலில் நின்றிருந்த இளைய பெருமாளை இராமன் என்றெண்ணி,

"தேவா ! நின்கழல் சேவிக்க வந்தனன்
நாவாய் வேட்டுவன் நாயடியேன்"

என்று கூறுகின்றான். அவனைத் "தாயினும் நல்லான்" என்று இராமனிடம் இலக்குவன் அறிமுகப்படுத்துகிறான். இங்கும் குகனது கையிலுள்ள மீனைப் பார்த்த முனிவர்கள் முகம் சுளிக்கத்தான் செய்திருப்பார்கள். இராமனும் பார்த்திருக்கிறான். ஆனால், கம்பராமன் முனிவர் களைப்பற்றி அக்கறை கொள்ளவில்லை. குகனது உள்ளம் வருந்தக்கூடாதே என்ற மிக உயர்ந்த நாகரிகத்துடன் கூறுகிறான்.

"அரிய தாம்; உவப்ப; உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்தெரிதரக்கொணர்ந்த என்றால் அமிழ்தினும் சீர்த்த அன்றே? பரிவினில் தழீஇய என்னின் பவித்திரம், எம்ம னோர்க்கும் உரியன, இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?" என்கிறான்.

அவன் கொணர்ந்த உணவு மிகச்சிறந்தது, தனக்கு ஏற்றது என மகிழ்ச்சியுடன், தான் உண்டதாகவே கொள்ளச் சொல்லும் இந்தப் பண்பை, நாகரிகத்தை எப்படிப் புகழ்வது !

சின்னஞ்சிறு காட்சிதான், சாதாரண நிகழ்ச்சிதான். ஆனால், அங்குகூட இராகவன் புகழில் சிறிதுகூடக் கசப்புத் தோன்றக்கூடா தென்று எவ்வளவு நுட்பமுடன் திருத்தம் செய்து தேனாய் இனிக்கச் செய்துவிட்டான் !

வாழ்க கம்பன் புகழ் !

# விரை செறி குழலி

கி. பக்ஷிராஜன்

இத்தொடர்மொழி மணம் நிறைந்த கூந் தலை உடையவள் என்று பொருள்படும். கம்ப ராமாயணத்தில் இத்தொடர்மொழி இரண்டிடங் களில் வருகிறது. ஒன்று,

''... ... ... ....
.... ... .... ...

**விரைசெறி குழலிமாட் டளித்த மெய்யனை**
**அரைசனென் றின்னமும் அறையற் பாலதோ''**

என இலக்குவன் கூற்றாக வருகிறது. மற்றொன்று,

**''அரியணை அநுமன் தாங்க, அங்கதன்**
**உடைவாள் ஏந்த,**
**பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச**
**விரைசெறி குழலி யோங்க வெண்ணெய்மன்**
**சடையன் வண்மை**
**மரபுளோன் கொடுக்க வாங்கி வசிட்டனே**
**புனைந்தான் மௌலி.'**

என்று பாடலில் கவிக்கூற்றாக வருகிறது.

முன்னையது, கானகத்திலே இராமனையும் தம்பியையும் மிதிலைப் பொன்னையும் விட்டு இராமன் ஆணையால் அயோத்திக்குத் திரும்பு முன் சுமந்திரன் அவர்களை நோக்கி, அரசருக்கும் மற்றையோர்க்கும் சொல்ல வேண்டிய செய்தி ஏதேனும் உண்டா எனக் கேட்கிறான். இராமன் சொல்லி முடித்ததும் இலக்குவனை நோக்குகிறான். அவனிடம் இலக்குவன் கூறுவதாக வருவது இத் தொடர்மொழி. இங்கு இலக்குவன் 'விரைசெறி குழலி' என்று குறிப்பிடுவது கைகேயியை. பின்னைய பாடலில் வரும் 'விரைசெறி குழலி' என்பது, இராமன் திருமுடி சூடும்போது சீதையைக்குறித்துக் கவியே கூறுவதாக வருவது.

முன்னையது வஞ்சப்புகழ்ச்சியாகக் கூறப் பெற்றது என்பது வெளிப்படை. முதல் நாள் மூத்த மகனுக்கு முடிசூடப் போவதாக மந்திரிகள், குலகுரு, சான்றவர், மக்கள்-இவர்கள் முன்னிலை யில் வாக்களித்த தசரதன், அன்றிரவே கை கேயியின் சாகஸத்தாலும், தந்திரத்தாலும் தன் முன்னைய முடிவை மாற்றியேயாக வேண்டிய இடர்ப்பாடான நிலைக்குள்ளாகி இராமன் காடு செல்லுமாறு வரமளிக்க வேண்டி ஏற்படுகிறது. இக்குவாகு முதல் மூத்த மகனுக்கே உரித்தாய் வந்த அரச பரம்பரை மாறுபடுமாறும், முதல் நாள் தான் கொடுத்த வாக்கு நிறைவேற முடியாத வாறும் செயல்பட்ட தசரதனை இகழ்ந்து பேசு கிறான் இலக்குவன். அரசன் தன்பால் வைத்த காதலைத் தகாத வழியில் பயன்படுத்தி, அவனை வஞ்சனையால் ஏமாற்றி வரம் பெற்ற கைகேயியை ''விரைசெறி குழலி' எனக் கேலி செய்கிறான். இலக்குவன் இவ்விடத்தே கூறிய 'விரைசெறி குழலி' என்பது பரிகாச மொழியே என்பதில் ஐயமில்லை.

ஆனால், 'அரியணை அநுமன்' என்ற பாடலில் வரும் 'விரை செறி குழலி' என்பது கவிக் கூற்று. அது தான் கிடந்த கிடையிலே பொருள்பட்டு மணம் நிறைந்த கூந்தலை உடையவளாகிய சீதையைச் சுட்டி நிற்பது.

இனி, 'அரியணை அநுமன்' பாடலில், மூன்றா வது அடியில் வரும் இத்தொடர்மொழி கம்பன் எழுதியதல்ல. அவன் ஒரு போதும் இத்தொடர் மொழியை இங்கு கையாண்டிருக்கமாட்டான் என ஒரு சாரார் கருதுகின்றனர். ஆகவே, இப்பாடலின் மூன்றாவது அடிக்குப் பல பாட பேதங்கள் காணப் படுகின்றன. கம்பராமாயணம் முழுமைக்கும் விரி வுரை எழுதியுள்ள ஸ்ரீ வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமியின் கம்பராமா யணப் பதிப்பில் இப்பாடலின் மூன்றாவது அடி,

**'விரைசெறி கமலத் தாள்சேர்**
**வெண்ணெய மன் சடைன் தங்கள்'**

என்று காண்கிறது. பாடல் உரை முடிவில் பிரதி பதம் என்று காட்டிய விடத்தே, 'கமலத் தாள்சேர்' என்பதற்குப் பதில் 'குழலியோங்க' என்ற பாட பேதம் காட்டப் பெற்றுள்ளது. 'கம்பராமாயண மேதை' விருது பெற்றவரும், 'கம்பசித்திரம்' 'சித்திரராமாயணம்' என்று கம்பராமாயண விளக்க வசனம் எழுதி யுள்ள உயர்திரு பி. ஸ்ரீ. அவர்கள் மூன்றாவது அடிக்கு,

**'விரிகட லுலக மேத்தும்**
**வெண்ணெய்மன் சடையன் வண்மை'**

என்பதுதான் சரியான பாடம் என்று கூறுகின்றார் கள் 'விரிகட லுலகமேத்த வெண்ணெய்மன் சடை யன் தங்கள் என்றும் ஒரு பாடமிருப்பதாகத் தெரி

கிறது. பிஸ்ரீ. அவர்கள் கொண்ட பாடமே திரு. எஸ். ராஜம் அவர்கள் பதிப்பித்துள்ள பதிப்பில் கொள்ளப் பெற்றுள்ளது. அண்மையில் சென்னையில் உயர்மன்ற நீதிபதி திரு. மு. மு. இஸ்மாயில் அவர்கள் தலைமையில் செயல்பட்ட கம்பராமாயண அறிஞர் குழுவினால் இராமாயணம் முழுவதும் ஒரே புத்தகமாக வெளியிடப்பட்ட பதிப்பில் 'விரைசெறி குழலி' என்ற பாடமே காணப் பெறுகின்றது. பி. நா. சிதம்பரநாத முதலியாரவர்களால் பல ஆண்டுகளுக்கு முன் பதிப்பிக்கப் பெற்ற பதிப்பிலும் 'விரைசெறி குழலி' என்ற பாடமே இருக்கிறது. செகவீரபாண்டியனாரின் 'புலவர் உலகம்' என்ற நூலிலும் இதே பாடம் தான் காணப்படுகின்றது.

இத்தகைய பாடபேதங்களில் 'விரைசெறி குழலி' என்ற பாடமே சிறக்கும் என்று அடியேனுக்குத் தோன்றுகிறது. ஏதனால்? என்ற கேள்வி எழத்தானே செய்யும். அடியேன் இம் முடிவுக்கு வந்தது ஏன் என்பதை விளக்குகின்றேன்.

'அரியணை அநுமன்' பாடல், இராமன் முடிசூட்டு விழா நிகழ்ச்சியைக் கூறுவதாகும். இப் பாடலில் அநுமன், அங்கதன், பரதன், இலக்குவன் - சத்துருக்கன் (இருவர்,) சீதை, வசிட்டர் சடையன் மரபுளோன் ஆகிய எழுவர் குறிக்கப் பெறுகின்றனர். இவர்கள் தவிர நகரமாக்களும் சிற்றரசர்களும் அடுத்த பாடலில் குறிப்பிடப் பெறுகின்றனர். இவர்கள் அனைவரும் இராமன் முடிசூட்டு விழாவைக் கண்டு களிக்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் ஒவ்வொருவர் மன நிலையையும் சிறிது நோக்குவோம்.

**இலக்குவன்:—** இராமனோடு இணைபிரியாது வாழ்ந்தவன். அரசவையில் அண்ணனுக்கு மகுடம் சூட்டத் தீர்மானித்ததும் அவன் உள்ளம் மகிழ்ச்சியில் திளைத்திருக்கும் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. மகுடம் சூட்டக் குறித்த நாள் காலையில் அவன் அக்கோலாகலத்தைக் கண்டு களிக்கத் தன்னைத் தயாராக்கிக்கொண்டிருந்தான் எனக் கொள்வதும் தவறில்லை. இரவு நிகழ்ந்தவையும், காலையில் கைகேயி சுமந்திரனை ஏவி இராமனை வரவழைத்து, தாயென நினைந்து தொழுது நின்ற அவன் முன்னே கூற்றெனத் தோன்றி, தான் வரம் பெற்றமை கூறுது தயரதன் பணி என்று கூறியதும், இராமன் அப்பணி தலைமேற்கொண்டு மின்னொளிர் கானம் அப்பொழுதே ஏகுவதாக விடை கொண்டதும் அவனுக்குத் தெரிய இடமில்லை. வசிட்டர் சென்று நிகழ்ந்தமை தெரிந்து அரசவையில் வந்து செய்தி சொன்ன பின்தான் அவன் கைகேயி வஞ்சனையாக வரம் பெற்றதை அறிகிறான். சினம் பொங்குகிறது. கைகேயியின் வஞ்சனையை எண்ணிக் 'கடகக் கை புடைத்து'ச் சிரிக்கிறான்.

> ''புவிப்பாவை பரங்கெடப் போரில் வந்தோரை
> யெல்லாம்
> அவிப்பானும், அவித்துஅவர் ஆக்கையை
> அண்டம் முற்றக்
> குவிப்பானும், எனக்கொரு கோவினைக்
> கொற்ற மௌலி
> கவிப்பானும் நின்றேன் இது காக்குநர் காமின்.''

என்று கொதிக்கிறான். வில்லில் நாணேற்றி அம்பு கைக்கொண்டு குதிக்கிறான். வருகிறான் இராமன். அக் கார்மேகம் பொழிந்த அமுத அற மொழித் தாரையால் இலக்குவனின் கோபக் கனல் அப்போதைக்குத் தணிகிறது. ஆனால், அண்ணன் முடிசூடிக் காணவேண்டிய அவா அவன் உள்ளத்தே ஆழப் பதிந்து அண்ணனுடன் சென்று தொண்டாற்றிய பதினான்கு ஆண்டுகளும் அவ்வாசை நிறைவேறுவதைக் கண்டு களிக்கத் துடித்துக்கொண்டுதானே இருந்திருக்கும்?

**பரதன்:—** கைகேயியின் சூழ்வினை நிகழ்ந்த காலையில் அவன் அயோத்தியில் இல்லை. தசரதன் இறந்ததும் அவனை அழைத்துவர வசிட்டரால் அனுப்பப்பெற்ற தூதரும் அயோத்தியில் நிகழ்ந்தவற்றை அவனிடம் கூறவில்லை. உவண முத்திரையிட்ட அரசாங்க ஓலை அவனை உடனே வருமாறு மட்டுமே கூறியது. வருகிறான். தந்தையை அவன் கோயிலிலே காணாது தாயின் மாளிகை செல்கிறான். எங்கும் ஒரே மயான அமைதி. ஒன்றும் விளங்காமல் தவிக்கும் அவன் முன் தோன்றுகிறாள் கைகயி. அவனது குறுக்குக் கேள்விகளுக்கெல்லாம் மெல்ல மெல்ல விடையிறுத்தவள், கடைசியில் தன்னால் நிகழ்ந்தவெல்லாம் தானே தெரியச் சொல்கிறாள். கோபத்தால் நிலை தடுமாறுகிறான் பரதன்; தாயைக் கண்டபடி பழிக்கிறான். அதோடு நின்றானா?

> நீயினு மிருந்தனை யானும் நின்றனென்
> ஏயெனு மாத்திரத் தெற்று கிற்றிலென்
> ஆயவன் முனியு மென்றஞ் சினேனலால்
> 'தாய்'எனும் பெயர்எனைத் தடுக்கற்
> பாலதோ?''

என்று தாய்க்கொலை செய்யவும் துணிகிறான். 'மகுடம் சூடு' என்று கூறிய குல குருவைக்

கடிந்து பேசுகிறுன். அண்ணனைக் கொணர்ந்து முடிசூட்ட முனைந்து, நகரையே திரட்டிச் சித்திர கூடம் சென்று, அண்ணனை மீண்டுவர வேண்டி எவ்வளவோ முயல்கிறுன். அண்ணனே அவனை எப்படியோ சமாளித்து, அவன் வேண்டுகோளின் படி தன் பதுகையை அளித்து அனுப்பிவிடு கிறுன். அயோத்தி செல்லாது நந்திக் கிராமத் திலே அண்ணன் பாதுகையை எழுந்தருள்வித்து இந்தியம் அடக்கி, அந்தியும் பகலும் நீரூறு கண்ணனுய், அண்ணன் மீண்டு வந்து முடிசூடிக் கொள்வதைக் கண்டு களிக்கத் துடித்துக் கொண்டிருந்தவன்.

**சத்துருக்கன்:—** பரதன் கூடவே இருந்த வன். நடந்த நிகழ்ச்சியொன்றும் அறியாதவன். காப்பிய முடிவுவரை பேசாத தம்பி. ஆனல், பரதன், 'நான் எரி புகப்போகிறேன், நீ அரசை ஆளவேண்டும்' என்றலுமே வெறுத்துப் பேசி, இராமன் முடி சூட்டில் தன் அண்ணன்மார் இருவ ருக்கும் இருந்த ஆசையையும் வேகத்தையும் விடத் தன் ஆசையும் வேகமும் ஒன்றும் குறைந்த தல்ல என்பதை வெளிப்படுத்தியவன்.

**வசிஷ்டர்:—** இராமன் திருமுடிசூட்டுக்கு வேண்டிய அனைத்தையும் ஆயத்தம் செய்து, சக்கரவர்த்தி வரவை எதிர்பார்த்து நின்று, அதற்குத் தடை ஏற்படவே, ''வாழ்வினை நுதலிய மங்கலத்து நாளி''லே இராமன் சீரை சாத்த வேண்டி வந்த விதியினை நொந்து, பரதன் தன்னைச் சினந்து கூறியதையும் ஏற்று, அவ னேடு சித்திரகூடம் சென்று, இராமனை மீண்டு வரக்கூறி, இராமனிடம் கண்டனமும் பெற்றுப் பரதனைப் போல் பதினன்கு ஆண்டு வரை இராமன் வரவை எதிர்நோக்கி நின்றவர்.

**அநுமன்:—** இராமன் தொண்டனுய்க் கடலைத் தாவிப் பிராட்டியைச் சேவித்து, அவள் இறக்கத் துணிந்தபோது எம்பிரான் நாமம் சொல்லி அவளுக்கு உயிர் தந்தவன். அவள் தன் நிலையை விளக்க அவளுக்குத் தைரியம் கூறியவன். அப்படிக் கூறியும் இராமன் தன்னை மீட்க வந்து விடுவான் என்பதில் நம்பிக்கை தளர்ந்தே நின்றவளாய்,

> **'' தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்**
> **அன்னை நோய்க்கும் பரதன் அங்காற்றுறும்**
> **இன்னல் நோய்க்கு மங்கே குதலன்றியே**
> **என்னை நோக்கியிங் கெங்ஙனம் எய்துமோ?''**

என வெறுத்து, தான் இறந்துதான் தன் பழி தீருமோ என ஐயுற்றவளாய்ச் ''சிறக்கு மாமியர் மூவர்க்கும் சீதை ஆண்டிறக்கின்ருள் தொழு தாள்'' என்று கூறுமாறும், மறுபிறப்பிலும் பெருமாளையே நாயகனுகப் பெற அருளுமாறும் தான் வேண்டிக்கொண்டதாக இராமனிடம் தொழுது கூறுமாறும் அநுமனை வேண்டிக் கொண்டவளாய்க் ''கவியின் மன்னனைச் சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப் போய், அந்த மில் நகர்க்கரசனுக் கென்பாய்'' என்று பணிக்கப் பெற்றவன். அப்பணியை, அப்புனித கைங்கர் யத்தை நிறைவேற்றத் துடித்துக்கொண்டிருந் தவன்.

**அங்கதன் :—** தன் தகப்பன் வாலியால் இராமனிடம் அடைக்கலமாகக் கொடுக்கப்பட்டு, இராமன் தன் திருக்கையால் வாளை நீட்டி, 'நீஇது பொறுத்தி' என்றருளப்பெற்று இராமபிரானின் திருமேனி காவலை ஏற்றுச் சடை முடி இராமனைக் காத்து நின்று மணிமுடி இராமனின் காவலாக நிற்கப் பாரித்தவன்.

**சீதை:—** சுமந்திரன் அந்தப்புறம் வந்து தன்னேடும் இளைய பெருமாளோடும் அமர்ந் திருந்த நாயகனைத் தயரதன் அழைத்து வரச் சொன்னதாகக் கூறி அழைத்துப் போக, அரசவையில் தன் நாயகனுக்கு முடி சூட்டு விழா நடக்கப்போவதாக அறிந்ததும் தன் நாயகன் மணி முடி சூடிப் பட்டத்து யானைமேல் பவனி வரும் கோலம் கண்டு மகிழ்வோம் என்ற பெருமிதத் தோடு காத்திருந்தவள் முன்னே நாயகன் சீரையும் சடையுமாகத் தோன்றியதைக் கண்டு மனத்துணுக்கமுற்று, பின் அவன் எவ்வளவோ கூறியும் கேளாது 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் பின்னே களிப்போடு கானகம் சென்று, அங்கு தன் தவறு காரணமாக இராவண னுல் சிறை வைக்கப்பெற்று, சுருதி நாயகன் வரும் வரும் என்றதோர் துணிவால் நவையறு குணங்களென்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்தி தன்னை இன்று அல்லது இன்னும் சிறிது நாளில் காணலாம், சிறை மீட்கப்படுவோம், நாயகன் அயோத்தி மீண்டபின் அவன் மகுடம் சூடி யானை மேல் பவனி வருவான், முன் நேர்ந்த ஏமாற்றம் தவிரும் என்று நம்பியிருந்தவள் பத்து மாதமாகியும் நாயகனைப்பற்றிய செய்தியொன்றும் தெரியாது போகவே இறத்தலே அறத்தின் ஆறெனத் துணிந் தவள், அநுமன் வரவால் மீண்டு, நாயகனைப் பற்றிய செய்திகள் தெரிந்தும் அநுமன் தைரியம் கூறியும் அற்ப நம்பிக்கையளாய், தான் மீட்கப் படாமல் இறக்கத்தான் நேரிடும் என்று உள்ளூரப் பயந்தவளாய்த் தன் மனத்தே உறைந்து கிடந்த ஏக்கத்தை வெளியிடுபவள்,

'' அரசு வீற்றிருந்தாளவும் ஆய்மணிப்
புரசை யானையில் வீதியிற் போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரைசெய் தென்னைஎன் ஊழ்வினை
உன்னுவேன்''

என்று கூறி, ஆவி வடிவிலாவது இராமன் முடி சூடுவதைக் காண வேண்டும் என்று பாரிப்பவள் போல அநுமனை நோக்கி, சுக்கிரீவனிடம் இராமனை அயோத்தி சேருமளவும் காத்து அவனை 'அந்தமில் நகருக்கரசாக்குவாய்' என்று கூறு மாறு பணித்தவள்.

**நகர மாக்களும் பிறரும் :—** அரசவையில் தசரதன் இராமனுக்கு முடி சூட்டி மகிழப் போவதாக அறிவித்ததும்,

''ஒத்த சிந்தையர் ஒருவரின் ஒருவர்முந்
தொருவர்''
தத்தமக் குற்ற தரசெனத் தழைக்கின்ற
மனத்தர்''

ஆகிக்களித்தவர் அவ்விழா தடையுற்ற தன்மையறிந்ததும் பதறிக் கதறித் தவித்தவர் கள், பதினான்கு ஆண்டுகள் கழிந்து இராமன் வந்து முடி சூடுவான் என்ற நம்பிக்கையோடு காத்திருந்தவர்கள்.

இப்படித் தவித்த அனைவரும் மனம் நிறை வுற்றுக் களிப்பெய்துமாறு இராமனுக்கு மணி முடி சூட்டப் பெறுகின்றது. இவர்கள் அனைவரினும் சீதையின் ஏக்கம் தனித்தன்மை யது என்பதை எவரும் மறுக்க முடியாது. பத்தைப், ஆசை பற்றிப் பாடிய கவியும் சீதையைப் போலவே முடி சூட்டு விழாத் தடையுற்றபோது தவித்திருப்பான் என்பதில் ஐயமில்லை. சீதையின் உள்ளத்தில் கிடந்த ஏக்கம் அவன் உள்ளத்திலும் தேங்கியே கிடந் திருக்கும். சீதையின் ஏக்கம் தீர்ந்து உள்ளம் நிறைவு பெறும் போது கவியின் உள்ளமும் நிறைவு பெறுகின்றது.

இனி, 'விரை செறி குழலி' என்றபாடத்தை மறுப்பவர்கள் என்ன காரணத்தால் மறுக்கிறார் கள் என்று பார்ப்போம். இலக்குவனால் கைகேயியைப்பற்றி இகழ்ச்சியாகவும், வஞ்சப் புகழ்ச்சியாகவும் கையாளப்பெற்ற இந்தத் தொடர்மொழியைச் சீதையைப் பற்றி உயர் வாகவும் மதிப்பாகவும் கூறும் போது கவி உபயோகிக்க மாட்டான். இதுதான் கம்பனது பாணி என்கிறார்கள். அப்படியானால், ஒரு பாத் திரத்தைப்பற்றி உயர்வாக மதிப்பாகக் கூறும் போது கையாளப்பெற்ற ஒரு தொடர் மொழியை வேறொரு பாத்திரத்தைப்பற்றி இகழ்வாகக் குறிப்பிடும் போது கவி உபயோகப் படுத்த மாட்டான் என்பதும் தானே போதரு மல்லவா? அப்படித்தான் கம்பன் செய்கிறானா என்று பார்ப்போம்.

தசரதனிடம் வந்த கோசிகன் வேள்வியைக் காக்க உதவி கோரும் போது,

''செரு முகத்துக் காத்திஎன நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி''

எனக் கேட்கிறதாகக் கவி கூறுகின்றார். இங்கு 'கரிய செம்மல்' என்ற தொடர்மொழி இராமனைப் பற்றிப் பெருமையோடும் செல்லமாகவும் குறிப் பிடும் கௌசிகர் கூறியதாகக் குறிக்கக் கவி கையாண்டதாகும். எனவே, வேறொரு பாத்திரம் இராமனைப் பற்றி இகழ்ச்சியாகவும் ஏளனமாகவும் குறிக்கும் போதும் கவி இத் தொடர்மொழியைக் கையாள மாட்டானென்று தானே கருத வேண்டும்? ஆனால், நாம் காண்ப தென்ன?

கைகேயியின் தூய சிந்தையை விஷமாக்க அவளோடு வாதிடும் மந்தரை சீதையையும் இராமனையும் பற்றி இகழ்ச்சியாகவும் ஏளன மாகவும் குறிக்க நினைத்தவள் அவர்களை,

**'சிவந்த வாய்ச்சீதையும் கரிய செம்மலும்'**

என்று கூறுகிறாள். கோசிகன் பெருமையோடும் செல்லமாகவும் இராமனைக் குறித்ததாகக் கூறும் போது அவன் வாக்காகக் கவி கையாண்ட, கரிய செம்மல் என்ற அதே தொடர்மொழியை அதே இராமனைப் பற்றி இகழ்வாகவும் ஏளனமாகவும் குறிக்கும் மந்தரை வாக்காகக் கையாளுகிறான்.

அதே போல், சீதையைப் பற்றி வெறுப்பும் ஏளனமும் தோன்ற மந்தரை வாக்காகக் கவி கை யாண்ட தொடர்மொழி 'சிவந்தவாய்' என்பது. அது சீதையின் அதர அழகை வியந்து புகழ்ந்து கூறியதாக வந்ததன்று என்பது வெளிப்படை. ஆகவே, அதே சீதையின் அதர அழகை வியந்து புகழ்ந்து மற்றொரு பாத்திரம் கூறும் போது அப்பாத்திரத்தின் வாக்காக இத் தொடர்மொழியைக் கவி கையாள மாட்டான் என்றுதானே கொள்ளவேண்டும்? ஆனால், கம்பன் செய்வதென்ன ?

பரதன் தீக்குளிப்பை உற்ற சமயத்திலே அநுமன் தடுத்தபின் மகிழ்ச்சியில் குதி போட்ட

பரதன், இராமனை எதிரகொள்ள நகரையே திரட்டிக்கொண்டு செல்கிறுன். செல்லும் போது அநுமன் கையோடு தன் கையை இணைத்துக் கொள்கிறுன். அப்படி இணைத்துப் போகும் போது சித்திரகூடத்தில் தன்னை விட்டுப் பிரிந்த அண்ணனது கதையைப்பற்றிக் கூற அநுமனை வேண்டுகிறுன். ஆரணிய காண்டத் தொடக்கத் திலிருந்து இராமன் பரத்வாஜரின் பர்ணசாலை வந்து சேருமளவும் நிகழ்ந்தவற்றையெல்லாம் ஒரு குட்டி ராமாயணமாகவே அநுமன் கூறியதாகக் காட்டுகிறுன் கவி. அதிலே வரும் ஒரு பாடல்.

'' அப்புறத் தெருவையின் அரசைக்
கண்ணுருத்
துப்புறச் சிவந்தவாய்த் தோகை
தன்னுடன்
மெய்ப்புகழ்த் தம்பியும் வீரன்ருனும்
போய்
மைப்பொழி லுறுபஞ்ச வடி'யில்
வைகினுன்''

சீதையைத் தன் 'பெருந்தெய்வமாகக் கொண்ட பரம பக்தன் அநுமன் சீதையைப்பற்றிக் கூறும் போது அவன் உபயோகித்ததாகக் கூறும் கவி கையாண்ட தொடர்மொழி,

'துப்புறச் சிவந்த வாய்த் தோகை' என்பது. மந்தரை 'சிவந்த வாய்ச் சீதை' என்று கூறும்போது எவ்வித அடைமொழியும் இல்லை. அவள் அப்படிக் கூறும் போது கண்டவர்கள் கண்கள் நோவுண்ணும்படி அருவருக்கத்தக்க முறையில் சிவந்த வாயளாகிய அந்தச் சீதை என் ஞெருத்தியும் என்று பொருள் கொள்ளுமாறே அத்தொடர்மொழியைக் கவி அங்கு உபயோகித் துள்ளான் என்பதில் ஐயமிருக்கவே முடியாது. அப்படிப் பொருள் கொள்ளுமாறு எவ்வித அடை மொழியுமின்றியே 'சிவந்த வாய்' என்ற தொடர் மொழியை உபயோகித்த கவி, இங்கு அத்தொடர் மொழிக்கு மேலும் ஒரு அடை கொடுத்து உபயோகிக்கிறுன். அடைமொழியின்றியே வந்த 'சிவந்த வாயே' கண்டவர் கண்களை நோவுபடுத்தும் என்ற பொருளில் கவி கையாண்டுள்ளான் என் ருல் 'துப்புற' என்ற அடைமொழியும் சேர்ந்தால் கண்டவர் கண்களைப் பிடுங்கி எறியும்படி கோர மாகக் காட்சியளிக்கும் சிவந்த வாயையுடை சீதை என்றல்லவா பொருள்படும். மந்தரை ஏளனமாகப் பொருள்படக் கூறிய அதே தொடர்மொழியைக் கம்பன் மேலும் ஒரு அடை கொடுத்து இன்னும் ஏளனமாகப் பொருள்படும்படி கையாள் கின்ருனே! அதுவும் சீதையைத் தெய்வமாகக் கொண்ட ஒரு பக்தன் கூற்ருகக் கையாண் டுள்ளானே ! கையாளுவாஞ, கையாளலாமா?

இவற்றையெல்லாம் பார்த்தால் கம்பன் உபயோகிக்கும் தொடர்மொழிகள் எந்தப் பாத்திரம் அதைக் கூறுவதாகக் கூறுகின்ருனே அப்பாத்திரம், அத்தொடர்மொழியை உபயோகிக்கும் சந்தர்ப்பம், அப்பாத்திரத்தின் அப்போதைய மனப்பண்பு - இவற்றுக்கேற்பப் பொருள் கொள்ளப்பட வேண்டும் என்றுதானே தேறும். பாத்திரங்கள் கூறுவதாக வந்தாலும் அத்தொடர்மொழியை அப்பாத்திரத்தின் வாயி லிட்டுக் கூறுபவன் கவிதானே !

'கரிய செம்மல்' என்ற தொடர்மொழியைக் கோசிகனும் மந்தரையும் முறையே பெருமையும் செல்லமும் தோன்று முறையிலும், இகழ்ச்சியும் ஏளனமும் தோன்று முறையிலும் கூறியதாகக் காட்டிய கவி, அதை மாற்றி 'சிவந்த வாய்' என்ற தொடரமொழியை முதலில் அருவருக்கத்தக்க முறையில் பொருள்படுமாறு மந்தரை கூற்ருகவும், அத்தொடர்மொழியையே மேலும் ஒரு அடை கொடுத்து, பவளம் போல் கண் கவரும் வனப் புடையதாகப் பொருள்படும்படி பக்த அநுமன் கூற்ருகவும் அமைத்துக் காட்டுகிறுன்.

இவ்விருமுறைகளிலும் பின்னையது போலவே தான் ''விரைசெறி குழலி' என்று இலக்குவன் கைகேயியைக் குறித்து வெறுப்பும் இகழ்ச்சியும் தோன்ற உபயோகித்ததாகக் கூறும் போது அவன் கூற்ருகத் தான் கையாண்ட அதே தொடர் மொழியை இங்குச் சீதையின் மன நிறைவைத் தான் கூறும் போது தன் கூற்ருகவே கையாள் கிறுன் கவி.

' அசோகவனத்திலே அநுமனிடம் சீதை,
அரசு வீற்றிருந் தாளவும் ஆய்மணிப்
புரசை யானையின் வீதியில் போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்'

என்று அழுதழி கண்ணினளாய், நாக்குழறத் திக்கித்திக்கிக் கூறியதை இராம பக்தனுன கவி யும் ஏக்கத்தோடும் உள்ளத் தடுமாற்றத்தோடும் தான் அக்கவியை எழுதியிருக்க வேண்டும். சீதையின் ஏக்கம் கவியின் உள்ளத்திலேயும் அதேபோல் கிடந்து அவனை அலைத்துக் கொண்டு தானே இருந்திருக்கும் !

இப்படி அநுமனிடம் கூறிய சீதையின் தோற்றத்தைக் கண்டு கூறுகிறுன் கம்பன். வனம்

புகும்போது பொய்யோவெனும் இடையாளொடும் இளையானொடும் ஐயோ! இவன் வடிவென்பதொர் அழியா அழகுடையானகிய இராமனது அழகை அனுபவித்துக்கொண்டே அவனைத் தொடர்ந்த கவி, அவன் சித்திரகூடத்தின் வனப்பையெல்லாம் சீதையை விளித்துக் காட்டும் போது,

''சீத நாண்மலர் நறையகில் நாவிதேன் நாறும்
சோணை வார்குழற் சுமைபெறு திடுகிடைத்
தோகாய் !'

என்று சீதையின் திருக்குழல்களைப் பாராட்டி விளித்ததைக் கேட்டவன் கவி. அதே கவி அசோக வனத்தில் அவளைக் காணும்போது இராமனல் வியந்து பாராட்டப்பெற்ற அதே சீதையின் திருக்குழல்,

''....... .........மதியை
அமைய வாயிற் பெய்துமிழ் கின்ற
அயிலெயிற் றரவின்
குமையுறத் திரண் டொருசடை யாகிய

கோரக்காட்சியைக் கண்டவுடன் துடித்துத் தானே இருப்பான். மயில் தோகை போல் அழகிய தாய்க் காட்சியளித்த அத்திருக்குழல் ஒட்டிச் சுருண்டு சடையாய்க் காண்கிறதே!

இந்தக் காட்சியும், அநுமனிடம் அவள் ஏக்கத்தோடு சீதை கூறியபோது கண்ணும் கண்ணீருமாகத் தோற்றிய அவள் திருமுகமும் கவியின் உள்ளத்தை அலைத்துக்கொண்டுதானே இருக்கும் !

இராமன் திருமுடி சூடும் போது இவ்விரண்டு சோகக் காட்சிகளும் ஒரே சமயத்தில் மறைகின்றன. அரவு போல் சுருண்டு ஒரு சடையாகக் கிடந்த சீதையின் திருக்குழல் சித்திர கூடத்தில் இராமனல் வியந்து பாராட்டப்பெற்றபடி 'விரைசெறி குழல்'' ஆகி மயில் தோகை போல் அழகுற விரிகின்றது. வீதியில் போகவும் கோலங்கள் காணவும் எதிர்பார்த்து, அவை கிட்டாது போன போது பரதவித்து, ஏங்கி, வாடி, தன் விதியை நொந்து கிடந்த சீதையின் உள்ளம் நாயகனுடன் அரியணையில் உடன் வீற்றிருக்கப் பெற்ற போது தன் ஆர்வக்கிடக்கை தான் முன் எதிர்பார்த்திருந்ததற்குப் பன்மடங்கு மேலாக நிறைவேறியவுடன் மகிழ்ச்சிப்பெருக்கால் உள்ளம் வீங்குகிறது. உள்ளம் வீங்கியது தோன்றத் திருமேனி பெருமிதத் தால் ஓங்குகிறது. முன்னைய சோகக் காட்சிகளைக் கண்டு சீதையோடு ஏங்கிய கவியின் உள்ளமும் அங்ஙனமேவீங்கி ஓங்குகிறது. தன்னுடைய மனநிறைவையும் காட்டும் முறையில் முன் ஒரு பாத்திர மூலமாகத் தான் ஏனைக் குறிப்புத் தோன்ற, இலக்குவன் கூற்றுகக் கையாண்ட அதே 'விரைசெறி குழலி' என்ற தொடர்மொழியைப் பாடலின் அதே மூன்ரு மடியின் அதே எதுகையில் அமைத்து நிறைவு பெறுகிருன் கவி. கம்பன் காட்டிய சோகக்காட்சிகளைப் படிக்கும் போது கவியுடன் உள்ளம் கலங்கிய நாமும், சீதையுடனும் கவியுடனும் சேர்ந்து, இக்காட்சியைக் கண்டு மகிழ்ச்சியோடு உள்ளம் வீங்கி உடலும் பெருமிதத்தோடு ஓங்குகிறோம். நம் உள்ளங்களும் ஏக்கம் நீங்கி நிறைவு பெறுகின்றன.

இத்தகைய உள்ள நிறைவுடன்தான் 'அரியணை அநுமன் தாங்க' என்ற பாடலிலே மூன்ருவது அடியில் எதுகையில் அமைத்துக் கம்பன் கூறிய 'விரைசெறி குழலி' என்றபாடமே சிறந்த பாடம். இராமகாதையைச் 'செவ்வழி உணர்வு தோன்ற'ச் செப்பிய கம்பன் எழுதியிருக்கக்கூடிய 'பாடம்' எனறு அடியேன் கருதுகின்றேன். 'பத்தர்' உள்ளத்தோடு ஆசை பற்றி அறையலுற்ற அக்கவியின் கவிதையை அக்கவியின் உள்ளத்தோடும் ஆசையோடும் கற்பார்களும் அடியேனுடைய இந்த முடிவை ஏற்றுக்கொள்ளவே செய்வார்கள் என்பது அடியேனுடைய முழு நம்பிக்கை.

# கூனி குமுறுகின்ருள் !

பி. சி. சீதாபதி 'குறளடிமை.'

பாத்திரங்கள் ஆயிரத்தைப் படைத்த, கம்பன் தன் காவியத்தே என்னையும் படைத்து, நான் இராமன் மேல் சினம் கொண்டு அவனுக்குக் கெடுதல் செய்துவிட்டதாக வர்ணித்து, அனைத்துலகும் அன்றும் இன்றும் என்றும் என்னை எல்லை மீறித் தூற்றுமளவிற்கு வைத்து விட்டான்!

கூனல் முதுகுடன் பிறந்த என் பெயர் மந்தரையென்ருலும், அனைவரும் கூனியென்றே குறிப்பிடுமளவிற்கு என்னை வர்ணித்து விட்டதற்காக நான் வியக்கவுமில்லை, வெறுக்கவுமில்லை, சினக்கவுமில்லை, வருந்தவுமில்லை! ஆனுல், அங்க ஹீனமான நான், ஏன் கைகேயியின் தோழியாக கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு வந்தேன் என்று எங்கேனும் ஒரு சிறு குறிப்புக்கூட காட்டவில்லையேயென்று தான் மனம் வெதும்புகிறேன். இராம நாடகத்தில் அந்த இறைவனை இராமனையே ஆட்டுவிப்பதற்கு நான் கூனியாக அயல் நாட்டிலிருந்து அயோத்திக்கு வரவேண்டுமா? அயோத்திப் பெண்டிராய தாதியர்தம்மில் ஒருத்தி, கூனியாக இருந்து இந்தச் சூழ்ச்சியைச் செய்யும் வாய்ப்பினை உண்டாக்கியிருக்கக்கூடாதா? எது காரணம் பற்றி என்னை இழுத்து வந்தாள் என்பதை எடுத்துக்காட்டியிருந்தால் என்மீது உலகம் கொண்டிருக்கும் வெறுப்பிற்கோர் எல்லையிருந்திருக்கும். ஆதி காவியத்திலிருந்து வேறுபட்ட பல காட்சிகளைப் படைத்த கம்பன், என்னைப் பொறுத்தவரை ஏனே வான்மீகியையே முழுதும் பின்பற்றிவிட்டான்!

கேகய நாட்டிளவரசியான கைகேயி, அழகும் அன்பும் அமையச் செல்வக் குழந்தையாக வளர்ந்து வந்தாள். அவட்குத் தாதி நான் ஒருத்தி மட்டுந்தானு? எடுத்ததற்கெல்லாம் தனித்தனி தாதியெனப் பல்லோர் அவளைப் பாராட்டிச் சீராட்டிப் பக்குவமாய்ப் பராமரித்து வந்தனர். என் உடல் குறைக்கேற்ற பணியாக, முற்றம் பெருக்கும் ஒரு சிறு வேலைக்கே என்னைக் கொண்டிருந்தாள்.

நானே, உடல் கூனல் பெற்றிருந்தாலும் உள்ளக்கூனல் உருதிருந்தேன். அநேகமாக நான் கைகேயி தனக்கு ஒத்த பருவத்தினள். எனக்கிட்டிருந்த சிறுபணியை முடித்த பின் வேறென்ன வேலை? எனவே, கைகேயியின் கல்வி கேள்விகள் வளர்வதில் ஒத்துழைத்தேன்; இயற்கையிலேயே அழகின் உருவமான அவட்குச் செயற்கையழகூட்டித் தன் நிழலைக் கண்டு தானே மயங்கச் செய்தேன்; அவளின் பருவ வளர்ச்சிக்கேற்ற உணர்ச்சிகளைச் செவ்வனே புரிந்துகொள்ளும் வகையுணர்த்தினேன்; அறுசுவையுண்டி பதம் பார்த்துப் பக்குவமாய்க் காலாகாலத்தில் உண்பித்தேன்; உடலுக்கும் உள்ளத்திற்கும் தெம்பூட்டக்கூடிய களியாட்டங்களில் அவளை ஈடுபடுத்தினேன். மொத்தத்தில் சொல்லப்போனுல் நானின்றி அவளில்லை என்று சொல்லுமளவிற்கு என் பிணைப்பிருந்தது அவளுடன்! 'இல்லை' என்கின்றீர்களா? ஆதாரம் காட்டுங்கள்!

கைகேயியும் அந்த அளவிற்கு அன்பு காட்டி எனக்குச் சுதந்திரம் கொடுத்திருந்தாள்! அவளைத் துயிலெழுப்பும் போழ்து 'தூங்கு மூஞ்சி' என்றுகூட விளிப்பேன்—கோபிக்க மாட்டாள்! சிந்தித்து விளையாட வேண்டிய கட்டங்களில் 'முட்டாள்' என்றுகூட நேரடியாகக் கோபித்துக் கூறுவேன்—சினக்க மாட்டாள்! சில சமயங்களில் அவள் எனக்குக் கொடுக்கும் பண்டங்களை அநாவசியமாக வீசி எறியும் மனே நிலையில் நடந்துகொள்வேன்-வெறுக்க மாட்டாள். இவற்றையெல்லாம் நம்ப முடியவில்லையா? சிறுவயது முதலோ அல்லது சேர்ந்திருந்த இணக்கத்தின் சிறிய இடைவெளியாலோ, உயர் நிலையினர்பால் தாழ் நிலையினர் இவ்வாறெல்லாம் தொடர்ச்சியாக நடந்துகொள்ளும் பழக்கம் இன்றேல் திடீரென இச்செய்கைகளை என் போன்ருர் கைக்கொள்ளல் ஆகாதென்பது மனேதத்துவ ரீதியிலான உண்மையல்லவா?

அப்பழக்கமிருந்ததால்தானே, இராமனுக்குப் பட்டாபிஷேகமெனத் தெரிந்ததும் கைகேயியை, 'உணங்குவாய் அல்லை; நீ உறங்குவாய்' என்று நாகரிகச் சொற்களால் 'தூங்கு மூஞ்சி, எழுந்திரு' என்றெழுப்பினேன். கோசலையை 'மதியினள்' என்று கூறும் முகத்தான் இவளை 'முட்டாள்' எனக் கூருமல் கூறினேன்; அவள் கொடுத்த பொன் மாலையை உதறியா விட்டேன்! வாங்கி ஓங்கி அடித்து

வீசியதால் நிலத்தில் குழி விழுந்ததைக் கம்பன் படமே பிடித்துவிட்டான் !

இவ்வாறு வாழ்ந்து வர, ஒரு நாள் கோசல நாட்டுக் கோவேந்தன் எங்கள் தலைவியைப் பெண் வேட்டு வந்தான். அவனுக்கு அப்போழ்து அப்படியொன்றும் அதிக வயதாகிவிடவில்லை; என்றாலும், 'முதல் மனைவி—அன்பிலும் பண்பிலும் சிறந்தவள் - கோசலை அகத்திருக்க இரண்டாம் தாரம் ஏன் விழைந்தான் ?' என்ற கேள்வி எங்களுக்குள் எழுந்தது. எவ்வளவுதான் இரகசியமேயானாலும் பெண்டிருக்கு — அதிலும் பணிப்பெண்டிருக்கு — ஏற்படும் ஐயங்கள் அதி விரைவில் உருவெடுத்து உலா வருமென்பது உலகறிந்த உண்மையல்லவா !

எங்கள் தலைவியின் இளமை எழில் தோற்றம் அம்மன்னவனை ஈர்த்தது என்றால் வியப்பில்லை ! ஒரு கோழையை எளிதில் கொன்று செல்ல வல்ல கூற்றம் போன்ற அவளின் பார்வையால் மனம் மடிந்தான்; காதற்சுவை நனி சொட்டச் சொட்டப் பேச வல்ல விழி மொழியாளின் கண்ணில் மயங்கினான்; விழைந்து வந்த வேட்டைக் குறியாகிய பெண்மான் தன் வலையில் வீழ்ந்ததென மகிழ்ந்தான்! அவளின் அழகின் ஏற்றத்தை நான் சொன்னால் நம்ப மாட்டீர்கள்! கைகேயி தயரதனை மணந்து பல்லாண்டுகள் ஆயபின், அவன் சுமித்திரையையும் மணந்து ஆண்டுகள் பல வாயின பின், வேள்வி செய்து மக்களைப் பெற்றான் தயரதன். அம்மக்களும் வளர்ந்து, விசுவாமித்திர முனிவரின் வேள்வி காத்துப் பின் மிதிலைக்குச் சென்றனர். இராமன், ஜனக மகாராஜன் வைத்திருந்த வில்லொடிக்க, சீதை திருமணம் நிச்சயமாயது. தசரதனுக்குச் செய்தி அனுப்பினர். தசரதன் தன் மனைவியருடனும் பரிவாரங்களுடனும் மிதிலைக்குப் புறப்பட்டான். அக்காட்சியை வர்ணிக்கும் பொழுது, கைகேயி இருந்த எழிற்கோலத்தைத்தான் கம்பன் முதலில் வர்ணிக்கின்றான், அவளுடைய அழகின் எழுச்சியைக் காட்டி! அப்படியென்றால் அவளின் அழகை—அதிலும் திருமணமாதற்கு முன்னம் தழைத்த அழகை—யாரே வர்ணிக்க வல்லார் ! அது மட்டுமா! தசரதன் கன்னியவளைப் பெண் மானெனச் சித்திரித்துச் சித்தத்தில் கொண்ட பசுமையான நினைவு, அவன் கிழமாகியும்—தன் மகனுக்கு முடி சூட்ட முடிவு கொண்ட நிலையிலும் மாறவில்லையென்பதைக் கம்பனே படம் பிடித்துக் காட்டுவானே!

''மடந்தையை, மானை எடுக்கும் ஆனையே போல்
தடங்கைகள் கொண்டு தழீஇ, எடுக்கலுற்றான்''

என்று பாடுகின்றானல்லவா! ஆகவே, இத்தகைய, அளவில்லா அழகில் மயங்கித் தசரதன் எம் தலைவி கைகேயியை வேட்டான் எனல் மிகையன்று !

என்றாலும், அவன் கூறிய காரணம் வேறு ! மூத்தாள் வாயிலாக எனக்குச் சந்ததி தோன்ற வில்லை இதுகாறும். எனக்குப் பின் நாட்டாட்சி புரிய நன்மகனில்லை. ஒரு நாட்டில் எவ்வளவு தான் நன்மைகள் மலிந்திருந்தாலும் நல்ல அரசனைப் பெற்றிராவிட்டால் அது பயன் அற்ற நாடேயல்லவா ? எனவே, 'பிள்ளைப்பேற்றினை விழைந்தே மறுமணம் வேண்டினேன்' என்றான்.

தம் மக்களே தங்கட்குச் செல்வமென்பர். அம்மக்கட்செல்வமும் அவரவர் செய்த செயல் களுக்கேற்றவாறு வந்தமையும் என்னும் நியதியை உணர்ந்த எங்கள் மன்னன், தசரதனின் மனோநிலையைப் புரிந்துகொண்டான். ஒத்தது அறிவானே உயிர் வாழ்வான் என்றும், ஒப்புர வினால் வரும் கேடு என்றாலும் ஒருவன் தன்னை விற்றாவது வாங்கிக்கொள்வதே தக்கதாகு மென்றும், உயர்ந்த பண்புடைய வாழ்வின் அடிப் படைத் தத்துவங்களை உன்னினான். மூத்தாள் இருக்கத் தன் மகளை இரண்டாம் தாரமாகத் தருவதால் தங்கள் குடும்பத்திற்குக் குறையேதும் வந்தாலும் பரவாயில்லையென்று தீர்மானித் தான். மேலும், மூத்தாள் வாயிலாக இத்துணை ஆண்டுகளாகப் பிள்ளையில்லையென்பதாலும் இனிப் பிறக்கும் வாய்ப்பிராதென்பதாலும், தன் மகள் ஈன்றெடுக்கும் பிள்ளைக்கே, தசரதனுக்குப் பின் கோசல நாட்டாட்சி முறையாக வந்தமையும் என்றும் உறுதியாய் நம்பினான்; கைகேயியைத் தசரதனுக்குத் திருமணம் செய்திட ஒப்பினான். (இதைப் புரிந்துகொண்டதனால்தான், மூல நூலில், எங்கள் மன்னன், தசரதனிடம் அவனுக் குப் பின் ஆட்சி தன் மகள் மூலம் பிறக்கும் மகனுக்குத்தான் அளிக்க வேண்டுமென்ற சத்தியம் வாங்கிக்கொண்டான் என்று வான்மீகி மாமுனிவர் கூறியிருப்பதைத் தன் காவியத்தில் குறிப்பிடாது விட்டுவிட்டான், கம்பன் !)

திருமணம் திருப்திகரமாக நடத்தேறியது. மணமக்கள் கேகய நாட்டில் தங்கியிருந்த சின்னாள் களுள் தசரதன் தன் பட்டமகிஷியாய்க் கோசலையைக் கொண்டதோடு பல்லாயிரமான மனைவியரையும் கொண்டிருந்தான் என்பது தெரிந்தது ! இத்துணை மனைவியரைக் கொண்டது வமிசாவளிக்கு அல்லவென்பது மட்டும் புரிந்தது. உள்நோக்கம் தெரிந்திலேம்.

மணமக்கள் கோசலத்திற்குச் செல்லும் ஏற்பாடுகள் நடைபெற்றன. அப்பொழுது எங்கள் தலைவிக்கு அளவில்லாச் சீதனம் வழங்கியதோடு நடைமுறைப்பழக்கப்படி அவளுடன் தோழியொருத்தியை அனுப்பவும் முடிவு செய்தனர். யாரை அனுப்புவது? உடனிருந்த அழகிய தோழியர் அனைவரும் 'நான், நான்' என முன் வந்தனர். அந்த அழகியர்க்கு என் போல் கைகேயியிடம் அதிகப் பிணைப்பும் இணைப்பும் இல்லையென்றாலும், கைகேயி அங்கக் குறையில்லா அத்தோழியருள் ஒருத்தியையே தன்னுடன் அழைத்துச் செல்ல விரும்பினாள்! அங்கக் கோளாறுள்ளவள் என்ற எண்ணத்தால், எங்கும் எதிலும் எப்பொழுதும் அவளுடனேயே இருந்த—உடலும் உயிரும் போல் வளர்ந்த—என்னை அவள் கேட்கவுமில்லை; அழைத்துச் செல்லும் விழைவினைக் காட்டவுமில்லை; மாறாக, என்னை ஒதுக்கிடும் முறையிலேயே அவள் பேச்சுகள் அமைந்திருந்தன! இது எனக்குப் பெரிதும் மனத்தாங்கலை உண்டாக்கியது. நெஞ்சம்வெதும்ப நீர் துளிர்த்தது கண்ணில். உள்ளூரக் கைகேயியை நிந்தித்த வண்ணம் பெருமூச்சுவிட்டு நின்றிருந்தேன்!

திடீரெனக் காற்று திசை மாறியது! 'அடுத் தடுத்து ஆயிரமாயிரம் அணங்குகளைக் கடிமண நிலைக்காக்கும் தசரதன், தவிர்க்க முடியாத சூழ் நிலையால் அவசரத்தில் வேறொரு பெண் கிடைக்க வில்லையென்ற காரணத்தால் நம் கைகேயியின் தோழிப் பெண்ணையே கைப்பிடிக்க நேர்ந்து விட்டால் நம் பெண் நாமனுப்பும் தோழிப் பெண்ணை இழக்கநேரிடுமே' என்று தயங்கினர் எம் மரசனும் அரசியும். இந்த ஐயம் கலந்த அச்சத்தின் விளைவாக, இயற்கையிலேயே அங்கஹீனம் பெற்ற என்னை அவளுடன் அனுப்பும் முடிவேற்றார்கள். இம் முடிவு எனக்கு ஓரளவிற்கு மகிழ்வை அளித்தாலும், முதலில் கைகேயியினால் ஒதுக்கப்பட்டதும், பின்னர் ஏற்பட்ட இந்த முடிவிற்கு அடிப்படைக் காரணமாக அமைந்ததும் என் அங்கஹீனம் எனச் சொல்லாமல் சொல்லி, என் நெஞ்சத்தில் நெடும் புண் ஏற்படுத்திவிட்டதற்கு இந்தக் கைகேயியே காரணமெனக் கறுவிக்கொண்டிருந்தேன்.

காலமெல்லாம் அன்பும் ஆர்வமும் மிகத் தொண்டாற்றி வந்த என்னைக் கைகேயி கூட இருந்தே குறை காட்டினாளே; அதற்குப் பழி வாங்கும் வகையில் இனி நான் அவள் கூட இருந்தே அவட்குக் குறை கூட்ட வேண்டுமென்று மனத்திற்குள் முடிவு கட்டினேன். குன்றி மணியின் வெளித் தோற்றம் போலச் செம்மை யாகத் தோன்றி, மனத்தின் உள் தோற்றத்தில் அக்குன்றிமணியின் மூக்கைப்போலக் கறுத்தே இருந்தேன்.

ஆண்டுகள் பல கழிந்தும் கைகேயியின் வாயிலாகவும் பிள்ளைப்பேறிலாது போகவே மன்னன் மணந்தான் சுமித்திரை என்பாளை, மூன்றும் தாரமாய். இருந்தும் பயனில்லை. ஆனால், வேள்வி செய்திட, மூன்று மனைவியர் வயிற்றில் நான்கு பிள்ளைகள் பிறந்தனர்!

நால்வரும் ஓடியாடி விளையாடிக் குதூகலமாய் வளர்ந்தனர். கோசலை வயிற்றுதித்த இராமனே கைகேயியின் பேரன்பிற்காளாகி, அவளே ஈன்றெடுத்த பிள்ளையெனும்படிக்கு அவளால் விழைந்து வளர்க்கப்பட்டான். கைகேயியின் அரண்மனையிலேயே இருந்த எனக்குத் தெரியாதா அந்த அன்பின் நெருக்கமும் வலிமையும்!

சிறு குழந்தை இராமன், மண் உண்டை கொண்டு வில்லம்பு விளையாட்டு விளையாட, ஒரு நாள் அவனையுமறியாது ஒருண்டை என் கூனல் முதுகின்மேல் பட்டது போன்று என்னருகில் வந்து வீழ்ந்தது; அவ்வளவு தான், என் முதுகின் மேல் பட்டதுபோல் நான் பாவனை செய்தேன், விளையாட்டாக! இராமன் சீராகப் பண்போடு வளர்ந்து வந்தமையால், உண்டை என் முதுகில் வீழ்ந்ததாகவே நம்பி வருந்தினான்! ஆம், தீவினை என்னப்படும் மயக்கத்தால் தீய செயல் புரிவோர் மட்டும்தான் தம் செய்கைக்காகப் பயப்படவும் மாட்டார்கள், மேன்மைத் தன்மை படைத்தோர் பயப்படத்தானே செய்வர்? இதனால்தான் கடைசிவரை தான் எனக்குத் தீங்கு செய்து விட்டதாக எண்ணி,

"சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன
செய்யல்; மற்றுஇந்
நெறிஇகழ்ந்து, யான்ஓர் தீமை
இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,
குறியது ஆம்மேனி ஆய, கூனியால்,
குலவுத் தோளாய்!
வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க்
கடலின் வீழ்ந்தேன்"

எனச் சுக்ரீவனிடம் அவனுக்கு நல்லாட்சி செய்யும் முறையைப் பற்றி அறிவுரைகள் கூறிய போது இராமன் கூறினான் எனக் கம்பன் பாடுகின்றான்!

யார் யார் வாயிலாக எதனைக் கேட்டாலும் அதனுடைய உண்மையை ஆய்ந்து பார்த்தல்

அறிவுடைத்தல்லவா ! இராமன் விட்ட உண்டை என் முதுகில் படவே இல்லையென்பதுதான் உண்மை ! எனக்கு ஏற்பட்டுள்ள களங்கத்தைத் துடைத்தெறிவதற்காக, அடிப்படை உண்மை யின்றி உரைக்கின்றேன் இவ்வாறு எனக் கருத வேண்டாம். இதோ விளக்குகின்றேன்.

இராம—இலக்குவர்களாகிய இரு பாலகர் களுடன் விசுவாமித்திரன் மிதிலை நகரின் மகிற்புறத்தே சென்றார். வழியில் ஒரு கல் கிடந்தது; இவர்கள் அருகே செல்லவும் அக்கல் ஒரு மாதாய் மாறியது; அவளே அகலிகை யெனவும், அவளுடைய பூர்வ கதை இன்னதெனவும் இராமனுக்கு விளக்கப்பட்டது.

கல் எவ்வாறு மாது ஆகியது என்பதையும் கம்பனே விளக்குகின்றான் ! ஆம், அவன் மாயம் செய்யவில்லை, மந்திரம் செய்யவில்லை. தன் ஆசானைப் பின் தொடர்ந்தான். எதேச்சையாக, இராமனின் கால் பட்ட தூசு அக்கல்லின்மீது படவும் அகலிகை தன் உருப்பெற்றாள் என்பதை,

''கண்ட கல்மிசைக் காகுத்தன்
கழல்துகள் கதுவ—
உண்ட பேதைமை மயக்குஅற வேறுபட்டு
உருவம்
கொண்டு,மெய் உணர்பவன் கழல்
கூடியது ஒப்ப—
பண்டை வண்ணமாய் நின்றனள்;
மாமுனி பணிப்பான்''

என்று கம்பன் பாடியுள்ளான்.

அது மட்டுமா ! மாமுனியாம் அந்த விசுவா மித்திரனே இராமனை வியந்து பாராட்டி,

''மைவண்ணத்து அரக்கி போரில்,
மழைவண்ணத்து அண்ணலே !உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்
கால்வண்ணம் இங்குக் கண்டேன்''

எனச் செப்புகின்றார் !

பின் நிகழ்ச்சிகளாகக்கூட, இராமனின் கை பட்டும் கால் பட்டும் கவந்தனும் விராதனும் உய்ந்தனர் எனக் கதை வளர்கின்றதன்றோ!

இவற்றின் அடிப்படைத் தத்துவம் என்ன ? இராமன் சாதாரண மனிதப் பிறவி கொண்டவன் அல்லன்; அவனுள் அவனறிந்தோ அறியாமலோ தெய்விகச் சக்தி உள்ளது; அந்தச் சக்தி, தீயன தீர்த்து நல்லன நாட்டும் என்பதேயல்லவா !

(இராமன் தெய்வத்தின் அவதாரமே என்று கம்பன் கழறுவதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும்; என் வாதத்திற்கு அந்த அளவிற்கான உண்மையே தேவையில்லை !) இந்தச் சக்தி எப்பொழுது, எப்படி இராமன்பால் அமைந்தது ? இளம் பிள்ளையாக, வில்லேந்தி விசுவாமித்திரன் வேள்வி காத்து நின்று, அரக்கரை அழித்துப் பின் தன் கைத்திறத்தால் தாடகையை வதைத்தானேயன்றி அப்பொழுது அவன் தெய்விகச் சக்தி பெறவெனத் தனி நின்று மாயமோ மந்திரமோ பயின்று அவளைக் கொல்ல வில்லை. ''கரிய செம்மலாகிய பொன் நெடுங் குன்ற மன்னன் சொல் ஒக்கும் கடிய வேகச் சுடு சரம் அல் ஒக்கும் நிறத்தினள் மேல் விடுதலும் தாடகை வீழ்ந்தாள்'' என்றுதானே கம்பன் வர்ணித்துள்ளான். இது முடிந்ததும், மிதிலை நோக்கிச் சென்றனர். கல், அகலிகையாக மாறியது ! ஆக, அயோத்தி நீங்கி இராமன் விசுவாமித்திரனுடன் செல்லும் முன்பே அவனில் இத்தெய்விகச் சக்தியிருந்தது என்பது தெரிகின்றது ! அதிலும், அவன் வேள்வியின் பயனாய், இறை யருட் செல்வமாய்ப் பிறந்தவன் !

''ஒருபகல் உலகுஎலாம் உதரத்துள்
பொதிந்து,
அருமறைக்கு உணர்வுஅரும் அவனை;
அஞ்சனக்
கருமுகிற் கொழுந்துஎழில் காட்டும்
சோதியை,
திருஉரப் பயந்தனள்—திறம்கொள்
கோசலை''

என்றெல்லாம் கம்பன் இராமனின் அவதாரத் தைப் போற்றிப் புகழ்ந்திருக்கக் காண்கின்றோம்! எனவே, அத்தெய்விகச் சக்தி இராமனின் பிறப் போடு வந்ததேயென்பது தெளிவாகின்றது, அன்றோ!

அத்தகைய தெய்விகச்சக்தி கொண்டவனின் கையினின்று வந்த மண் உண்டை என் மேனியில் பட்டிருந்தால் - ஏன், அதில் ஒட்டியிருந்த துகளே பட்டிருந்தால்—என் அங்கஹீனம் அப்பொழுதே மறைந்திராதோ, பின்னாளில் அகலிகைக்குக் கிடைத்த அருள் போலே ? எனவே, அவனிட்ட உண்டை என் முதுகின் மேல் படவேயில்லை என்பதை நம்பித்தானே ஆக வேண்டும்!

இனி, இராமன் என் மேல் உண்டையை- என்னைக் கேவலப்படுத்தவேண்டுமென்றே இட்டான் என்பதுவும் கற்பனையே! அவனோ உயர்ந்த ஒழுக்கம் செறிந்த குடியில் பிறந்தவன்; வளர்ந்த முறையோ அறநெறிகள் மண்டியது.

''அமிர்துஉகு குதலையோடு அணிநடை
பயிலா,
திமிரம்அது அறவரு தினகரன் எனவும்,
தமரம துடன்வளர் சதுமறை எனவும்,
குமரர்கள் நிலமகள் குறைவுஅற வளர்
நாள்''

என்று கம்பன் வர்ணிக்கின்ருன் அன்ரே!

இராமனுடைய பண்போ, எப்போதும் மென்மையானது. பிறர் துக்கம் கண்டால் பொருதவன். மன்னன் — மாமன்னன் — மக னுயிற்றேயென்ற மமதையே இல்லாதவன். அதனல்தானே அவன் வெளியில் உலாவி வரும்போழ்துங்கூட எதிர்ப்பட்டவர்களின் நலன் விசாரிக்கும் தன்மையனுய் வளர்ந்தான்!

'' எதிர்வரும் அவர்களை, எமையுடை
இறைவன்,
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா,
எதுவினை? இடர்இலை? இனிதுநும்
மனையும்?
மதிதரு குமரரும் வலியர் கொல்''

எனக் கேட்டதாகக் கம்பன் பாடியுள்ளானே !

இத்தகைய இரக்க குணம் படைத்த மதிதரு குமரனுன இராமன் என் உடற்குறைக்காகப் பச்சாதாபப் படுவானேயன்றி — இரங்கி வருந்துவானேயன்றி — அக்குறையைக் காட்டி ஏளனம் செய்து விளையாடுவானு?

''சிறியர்என்று இகழ்ந்து நோவு
செய்வன செய்யல்; மற்றுஇந்
நெறி இகழ்ந்து, யான்ஓர் தீமை
இழைத்தலால்.... ..''

என்று இராமனே கூறியுள்ளானே என்று கேட்கத்தான் தோன்றும். இங்கேதான் கம்பனின் கைத்திறம் பட்டு, அவன் சொல்லுண்டையால் என் கூனல் இன்னமும் வளையும் நிலை ஏற் பட்டுள்ளது!

அயோத்தியா காண்டத்தின் தொடக்கத்தி லேயே கடவுள் வாழ்த்துப்பாவில் தன் கூற்ருக,

''கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்ப'' என்று கம்பன் பாடிவிட்டதை உறுதிப்படுத்துவதற்கென்றே இராமன் வாயி லாகப் பின்னரும் தன் கருத்தைக் காட்டியுள் ளான்!

இதையும் நிரூபிக்கின்றேன்!

அந்தப்புரத்தில் கைகேயியின் மனத்தை மாற்ற நான் பட்ட பாடு எனக்குத்தானே தெரியும் ? அவளிடம் என்னென்ன கூறி அவளை என் வழிக்குக் கொணர்ந்தேன் என்பது அவட்கும் எனக்கும் மட்டும்தானே தெரியும்! அந்தச் சூழ் நிலை விட்டதுமே இராமன் காடேகிவிட்டான். அப்படியிருக்க என்னுல் வந்த வினை என எப்படி இராமன் அறிவான்? இந்த இரகசியத்தை பின்ன ரும் அவனிடம் எவரும் கூறவில்லையே! அதனுல் தான் கூறுகின்றேன், கம்பன் தன் கருத்தை இராமன் வாயேற்றிவிட்டானென்று!

அது மட்டுமா! என்மேல் இருந்த ஆத்திரத்தில் இராமனையே சொல்லாதன வெல்லாம் சொல்ல வைத்துவிட்டான் கம்பன் என்பதும்,

''வெறியன எய்தி, நொய்தின்
வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்''

என்ற பாடல் அடியால் புலப்படும்!

'வெறியன' என்றது எத்துயரைக் குறிக்க வந்தது ? அயோத்தி ஆட்சி இழந்தமையையா ? இல்லக்கிழத்தியாம் சீதையைப் பிரிந்தமை யையா ?

தந்தை தசரதன் அழைத்து, 'அரசாட்சியை நீ ஏற்றுக்கொள்' என்று கூறிய போழ்து தாமரைக்கண்ணன் காதல் உற்றிலனுய், இகழ்ந்திலனுய் அரசனின் ஆணையை ஏற்ருன்! பின்னர், கைகேயி அழைத்து ''பரதன் நாடாள, நீ கானகம் சென்று பதினுன்கு ஆண்டுகள் தவக் கோலம் ஏற்றுப் பின் வா'' என்று கூறிய போழ்து, யாரும் செப்ப அருங்குணத்து இராமன் திருமுகச் செவ்வி, முன்பிருந்ததை ஒத்தே பின்பும் அன்றலர்ந்த செந்தாமரையினை வென்று நின்றது அல்லவா! எனவே, அதனை நினைந்து 'வெறியன' என்று அவன் சொல்லும் வாய்ப் பில்லை! ''இல்லை யில்லை, அவன் மனத்தே இருந்தது வெறுப்பு; சொல்லில் அது அன்றங்கு தோன்றவில்லை. அதனுல்தான் 'என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்ரே? என் இனி உறுதி அப்பால்? இப்பணி தலைமேல் கொண்டேன்; மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்!' என்று தன் சிற்றன்னையிடம் செப்பிச் சென்ருன்'' என்று கூறுகின்றீர்களா! நெஞ்சத்தில் இருப்பதைத்தானே முகம் காட்டும்! இன்ப உணர்வு பெற்ருலும், வெறுப்புணர்ச்சி பெற்ருலும் முகம் தெரிவித்துவிடும்; ஆகையால், முகத்தைக்காட்டிலும் அறிவுடையது உண்டோ? என்பது அறிவினன் வாக்கு! மேலும், உள்

ளொன்றுவைத்துப் புறமொன்று பேசும் தன்மையனு இராமன்? அப்படிப்பட்டவன் என்றே கொண்டாலும் உள்ளொன்றுய் அமைவது உத்தமமானதாகவும், புறம் சொல்லுவதோ எளிமையானதாகவும் அமைவதன்றே, இராமனுக்கு ஏற்புடைத்து, கம்பன் அவனை அவதார புருஷனுகக் காட்டிவிட்டதால். சாதாரண மானிடர் மனத்தேயன்றே உள்ளே தகாதன இருக்க, வெளியுரைப்பது தக்கது போல் அமையும்! ஆக, அந்த அடிப்படையிலும் அவன் 'வெறியன' என்று சொன்னதாகக் கூறியது தவறுடைத்தாயிற்று!

மேலும், கைகேயி கூறும் பொழுது, ''நீ போய், தாழிருஞ் சடைகள் தாங்கி, தாங்க அரும் தவம் மேற் கொண்டு, பூழிவெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைக ளாடி ஏழிரண் டாண்டின் வா'' என்றுதானே குறிப்பிட்டாள்! அவனும் 'இப்பணி தலைமேல் கொண்டேன்' என்று தானே கூறிச் சென்றுன்! அப்படியிருக்க, அத்துறவு நிலைக்கு இழுக்கு வரும்படியாக ஆட்சியைத் துறந்ததற்கு இப்பொழுது வருந்துவானு? வருந்திக் கூறுவானு? 'எந்த எந்தப் பொருளின் மீது ஆசையொருவன் நீங்கினுனே அந்த அந்தப் பொருளால் அது கிடைக்கவில்லையே என்னும் துன்பம் அடைய மாட்டான்' என்பதும், 'ஒரு பொருளிடத்திலும் ஆசையில்லாது இருப்பதே தவம் செய்வதற்கு அழகாகும்; ஆசையிருந்தால் மீண்டும் அறிவு மயக்கம் ஏற்படும்' என்பதும், 'முழுவதும் துறந்தவரே மேல் நிலையினர்; மற்றவர் ஆசை வலையில் சிக்கியவரே ஆவர்'' என்பதும் துறவிக்குரிய இலக்கணங்களுள் சிலவன்றே?

ஆக, நாட்டாட்சி நீங்கியமையை நினைந்து இராமன் 'வெறியன' என்று கூறினுன் என்னல் ஏற்புடைத்தன்று.

இனி, சீதையைப் பிரிந்து அல்லலுற்று அழுங்குவதற்கு நானு காரணம்? சடாயுவின் மூலமாகச் சீதை கவர்ந்து செல்லப்பட்டதை அறிந்தான், இராமன். கொதித்தெழுந்தான்; 'ஏழேழு உலகங்களையும் அழித்துவிடுகின்றேன்' எனச் சினந்து துள்ளினுன்! வயதின் முதிர்ந்த—அறிவின் முதிர்ந்த—அனுபவத்தின் முதிர்ந்த—சடாயு 'சீதையைத் தனித்து நிற்க விட்டிட்டு மானின் பின்னுக ஓடிச் சென்று உங்கள் குலத்திற்கே பழி உண்டாகும் படியான சூழ் நிலையில் வீழ்ந்துவிட்டீர்கள்; யோசித்துப் பாருங்கள்; இது நீங்கள் செய்த குற்றமே யன்றி உலகம் செய்த பிழையேதும் உண்டோ?' என்றெல்லாம் எடுத்துக் கூறி இராமனின் சினத்தைத தணித்தான். அவனும் சடாயு செப்பியதன் உண்மையை ஓர்ந்து, தன் மிகுந்த சீற்றம் தணிந்தான்

'எவர்மீதும் சினம் கொள்வதைத் தவிர்தல் வேண்டும்; அந்தச் சினத்தினுலேயே தீமையான விளைவுகள் எல்லாம் தோன்றுகின்றன' என்ற அறத்தை மறந்து, முதலில் கொந்தளித்துச் சினந்தவன், 'எல்லையில்லாத சினத்தின் வழியில் செல்பவர்கள் இறந்தவர்களுக்கு இணை; சினத்தை நீத்தவர்களோ, துறந்தவர்களுக்கு இணையாவர்' என்பதைப் பின்னுல் நினைந்து தெளிந்தான். அப்பேர்ப்பட்டவன், இப்பொழுது, தன் மனைவியைப் பிரிந்துள்ளமைக்கு நான் காரணம் என்பானு?

ஆதியில் இலக்குவன், 'அண்ணலுக்கு முடியில்லை; ஆரண்யம் செல்ல வேண்டும்; பரதன் பாராள வேண்டும்'என்பதை அறிந்ததும் மிகுந்த சினத்தால் கொதித்தெழுந்தான். ஆனுல், அறிவுத்தெளிவோடு,

> ''நதியின் பிழைஅன்று, நறும்புனல்
> இன்மை ; அற்றே
> பதியின் பிழைஅன்று ; பயந்து நமைப்
> புரந்தாள்
> மதியின் பிழைஅன்று ; மகன்பிழை
> அன்று ; மைந்த !
> விதியின் பிழைநீ இதற்குஎன்னை
> வெகுண்டது''

என்றுன். இவ்வாறு, தானே அல்லலுற்றுச் சினக்க வேண்டிய நேரத்திலே புந்தித் தெளிவோடு விவேகமுடன் இயற்கையையெல்லாம் சுட்டிக் காட்டித் தனக்கு வந்த அவல நிலைக்கு யாரும் காரணர் அன்று, தன் விதி வழியே அஃது நடந்துள்ளது என்று தன் தம்பிக்கே எடுத்துரைத்த பண்பாளன், புதிதாய் நட்புக் கொண்டவனுக்கு அறிவுரைகள் எடுத்துரைக்கும் பொழுது வேண்டாதவைகளை, ஏக்கம் தொனிக்க, என்னை முன்பின் அறியாதவனிடம் சுட்டிக் காட்டிப் பேசுவானு ?

பரதன், சீரை அணிந்து சத்துருக்கனனுடன் தேரில் ஏறித் தம் மன்னன் இராமனைக் கானிலிருந்து திரும்ப அழைத்து வரவென்றுத் துயர்ப் பட்ட மனத்தோடு புறப்பட்டான்; நாட்டு மக்களெல்லாம் புறப்பட்டனர். அப்பொழுது அங்கு கூட்டத்தில் நானும் கானகம் செல்லப் புறப்பட்ட மக்களிடையில் செல்லக் கண்டு சினத்தால் சத்துருக்கனன் என் முடியைப் பிடித்திழுத்ததும் பரதன் தடுதததுக் கூறினுன்: ''முறை கெடுத்து என் முன்னவனைக் கானகம் கடத்தியவளை,

என்னையீன்ற தாயென்றும் பாராது சின்ன பின்னமாய்ச் சிதைத்திருப்பேன் ; ஆனல்: நம் மூத்தோன் என்னை அச்செய்கைக்காகக் கோபிப்பான் என்றுதான் பொறுத்துக் கொண்டேன். அதே போல், தம்பி! இந்தக் கூனியை நாம் வெகுண்டாலும் அண்ணல் சினக்கும் ; எனவே அவளை விடு ; நாம் செல்வோம்" என்ருன் ! அந்த அளவிற்கு அருங் குணம் படைத்த அந்த இராமனு இப்பொழுது என்னைக் குறை கூறுவான் ? நல்ல வேளை, இராமன் காலத்திற்குப் பின்பு வந்து இந்தக் கம்பன் என்னை இப்படியெல்லாம் சினந்து, அளவிற்கு மீறி வெறுத்து எல்லையில்லாது ஏசுகின்ருன் ; இராமன் இருந்திருப்பின் இவன் பாடு என்னவாகியிருக்குமோ !

எனவே, எங்கெல்லாம் என்னைப்பற்றி ஏச்சும் பேச்சும் வந்துள்ளனவோ அவை யனைத்தும் கவிச்சக்கரவர்த்தி, தம் சீற்றக் கருத்துகளைத் தன் கூற்ருகவும் பிறர் வாய்க் கூற்ருகவும்—ஏன், இராமன் கூற்ருகவுங்கூட— சொல்லியவையேயன்றி வேறல்லவெனத் தெளிவீர் !

இனி, நான் இராமனை வெறுத்தவள் அல் லள் என்பதையும் காட்டுகிறேன். இராமன் மண்ணுண்டை விட்டதால் சினம் கொண்டவளாக இருந்திருப்பேனுனல் அவன் கைகேயியின் அந்தப்புரத்தில் வளர்ந்த சூழ்நிலையில் அப்போதைக்கப்போது விஷமத்தனமாக அவனுக்குத் தொல்லைகள் கொடுத்து, கொடுமைப்பார்வையில் நடத்தியிருக்க மாட்டேனு? அப்படி நடத்தியிருந்தால் என் போக்குப் பிறர்க்குத் தெரிந்திருக்காதா ? அதன் பலனுக நான் ஒறுக்கப்பட்டிருக்க மாட்டேனு ? அல்லது ஒடுக்கப்பட்டாவதிருக்கமாட்டேனு ? இதுபற்றி ஒரு சிறு குறிப்பேனும் கம்பன் கூறி யுள்ளானு ? முற்குறிப்புகள் ஏதுமின்றித் திடீரென என்னைத் தன் பாவில் புகுத்தி, கண்டவர் கேட்டவர் அனைவரும் நான் 'இராமனைச் சினந்ததால் அவனைக் கானகம் செலுத்தியவள்' என்று முழுமையாய் நம்பும் படி பாடிவிட்டானே என்று எண்ணும் போழ்து கம்பனின் கவித்திறத்தை யானே வியக் கின்றேன்; வாழ்த்துகின்றேன்.

ஆனல், பரதன் குழுவுடன் அண்ணலை அழைத்து வருதற்கெனக் கானகம் செல்ல வேண்டிய அவசியம் என்ன எனக்கு, நான் இராமன் பால் சீற்றம் கொண்டவளாயின் ?' 'உன் தலைவி கைகேயியே செல்லும் போழ்து தாதியாகிய நீயும் செல்லவேண்டியதுதானே' என்கிறீர்களா ? அப்படியானுல், அவள் பின் நின்று செல்லாது மற்ற மக்கள் குழாத்தில் வந்து ஏன் சேர வேண்டும் ? 'செய்ததையும் செய்துவிட்டுக் குற்றத்தை மறைக்க மற்றவர் களோடு சேர்ந்திட முயன்ருய் !' என்கின்றீர் களா ? அப்படியானுல், அழுமூஞ்சித்தனமில்லை யென்ருலும் ஓசைப்படாமல் ஒட்டிக்கொண்டு தானேயிருப்பேன் ! ஆனல், கூட்டத்தில் சேர்ந்துகொண்டதைச் சத்துருக்கனனே கண்டு கொள்ளும் அளவிற்குக் கூட்டத்தை இடித்துக் கொண்டு முன் சென்றேன் என்றல்லவா கம்பன் கூறியுள்ளான் !

" மந்தரைக் கூற்றமும், வழிச்செல்வா ரொடும்,
உந்தியே போதல் கண்டு"

என்றுதானே பாடியுள்ளான் !

ஆக, நான் இராமனைக் காண்பதிலும் அவனைத் திருப்பி அழைத்துக்கொண்டு வருவதிலும் ஆர்வம் மிக்கிருந்தேன் எனத் தெரிய வில்லையா ? 'இல்லையில்லை; உன் ஆர்வமெல்லாம் அவன் திரும்பி வரச் செய்யக்கூடாதென்பதே; அதற்கான விஷமத்தைச் செய்வதற்கே புறப்பட்டாய்' என்கின்றீர்களா ? அஃது உண்மை யானுல், சீற்றம் பெற்ற சத்துருக்கனின் கண்ணில் பட்டு நடந்த நிகழ்ச்சியின் பின்னும் கடைசிவரை சென்றிருப்பேனு? சாகசம் ஒன்றும் புரிய இய லாது என்று ஓசைப்படாமல் திரும்பியிருக்க மாட்டேனு ? இல்லை, இராமனிடம் நாங்கள் சென்றடைந்த சூழ்நிலையில் நான் ஏதும் சேட்டை செய்தேன் என்ருவது கம்பன் கூறியுள்ளானு ? நான் புறப்பட்டதும், 'மந்தரைக் கூற்றமும்' என்றென்னைக் குறிப்பிட்டவன் கானகச் சூழலில் என்னைப்பற்றி ஏது கூற்றமும் கொண்டானில் லையே!

அரக்கர் குலத்தை அழித்த இராமன், தன் நாடக முடிவில் தசரத சக்கரவர்த்தியே மேலுலகி லிருந்து வந்தார் ! இராமன்பால் 'என்ன வரங்கள் வேண்டும் ?' என்ருர். 'நீ துறந்த மனைவி எனக்குத் தாயாகவும் அவள் மைந்தன் என் தம்பியாகவும் ஆகும் வரங்கள் வேண்டும்'என்ருன் இராமன். அவ்வாறே அளிக்கவும் பெற்ருன். 'அத்தகைய மன்னிக்கும் மாபெரும் பண்புள்ளவன் என் மேல் குறை கூறித் திரிவானு ? என்று சற்று சிந்தித்துப் பாருங்கள்.

"பின், 'ஏன் இராமன் நாடிழந்து கானேக வேண்டும்' என வரங்கள் கேட்கச் சொன்னுய், கைகேயியிடம் ?" என்கின்றீர்களா ? இங்குதான் என் வஞ்ச நினைவு என்னை வழுக்கி வீழ்த்தியது !

எந்த அந்தஸ்தும், என்னுலேயே பெரிதும் ஏத்திப் போற்றப்பட்டுள்ள எந்தப் பேரழகும் என்னை ஏளனப்படுத்த கைகேயியின் செயலில் நின்றதோ அதே அந்தஸ்து, அதே பேரழகு இரண்டாலும் என் கணையைத் தொடுத்தேன். சக்கரவர்த்தியாக இராமன் முடி சூடின் கைகேயி தன் மதிப்பிழப்பாள் என்று அடித்துப் பேசி, ஆதாரங்களை அடுக்கி, அவள் மனத்தையே மாற்றினேன். எந்த அன்பொழுகும் அழகன் இவளின் மகனுகவே பாவிக்கப்பட்டுப் பட்டத் திற்கு வர இருந்தானே அதே அழகன் இவளி னின்றும் பிரிந்து அவன் கானேக வேண்டுமெனக் கருதினேன்.

தன்னினும் அழகாக வேறொருத்தி அமைந்தால் அவளை முறைத்துப் பார்ப்பது பெண்ணின் தன்மை. அது பொருமையால் வரும் சீற்ற முறைப்பு. அதைவிடப்பொல்லாதது, ஒரு பெண்-அதிலும் அழகான பெண் — மற்றவளின் அங்கஹீனத்தை மறைமுகமாகவோ, வெளிப் படையாகவோ கூறிவிட்டால் தோன்றக் கூடிய வஞ்சினப் பார்வையென்பதைப் பெண்டிரேயறிவ ரன்றிக் கம்பனு அறிவான் !

கைகேயியின்மேல் பட்ட என் வஞ்சினப் பார்வையே இராமன் அவளைப் பிரிந்து கானேகச் செய்ய நிலைக்களனுயிற்று. அஃதன்றி இராமன் பால் நான் கொண்ட ஆத்திரம் ஏதுமில்லை. என்றுலும், என் செய்கையின் விளைவாக இராமன் வீண் தொல்லைகள் ஏற்க வேண்டிய தாயிற்றே என்று ஏங்குகின்றேன். பெண்புத்தி பின்புத்திதானே ! கம்பனின் பாத்திறத்தால், இராமனை வெறுத்த வஞ்சனைக்காரியென்று கற்றோரும் மற்றோரும் என்னைக் குறிப்பிடுதல் கண்டு குமுறுகின்றேன். ஏக்கமும் குமுறலும் ஒன்றுசேர, இராமன் அருள்வேட்டு என் கூனை நிமிர்த்திக்கொள்ள ஏலுமென்றுலும், அவன் திருவடிகளைக் கண்டுகொண்டே இருப்பின் பிறர் பகரும் பழி என் நெஞ்சைப் பிழியாது என்ற நம்பிக்கையில் கூனியாகவே நின்று அவன் பதம் பணிகின்றேன்.

என் மனந்திறந்து, நீங்கள் அறியாத, உணராத, உணர முயலாத உண்மைகளைக் கொட்டிவிட்டேன், நெஞ்சங் குமுற. இன்னமும் என்னை அதே வெறுப்புப் பார்வையில்தான் பார்ப்பீர்களா ? பாருங்கள், நீங்களும் கம்பன்வழி வந்த கவிகள்தானே !

ஆனுல், ஒன்று ! சிறந்த பயனை ஆராயத் தொடங்கிய அறிவின் சிகரமான கம்பன், அவையடக்கம் என்னும் தன்மையால் 'மாசு எனக்கு எய்தவும்' என்று, பெரும்பயன் தராத சொற்களைக் கூறினனே ! அவனுடைய காவியத்தைக் கற்கக் கற்கப் புதுப்புது அறிவு தோன்றி விளங்க, பெரியோர் வாய்ச்சொல் பொய்க்காது வாய்மைச் சொல்லாகவே நிற்கும் என்று நிரூபிப்பது போல, இதுவரை நான் கம்பனுக்கு மாசு கற்பித்து அழுதேன், என் ஊழ்வினையால் ! முன்னர்தான் என் ஊழ்வினைப் பயனுல் இராம நாடகத்தில் கூனியாகிக் காகுத்தன்மேல் குறை கூறிக் கொடுமை இழைத்தேன் என்பர் ! அதன் பின்னரேனும் அக்குணம் நீங்க வேண்டாமா ? அவ் ஊழ்வினையை மாற்றவொண்ணுது அஃதே முன்வந்து நிற்க, இப்பொழுது கவிச்சக்கர வர்த்திபற்றியே குறை கூறி நிற்கின்றேன் ! இதற்காக நான் எத்துணை ஆயிரமாயிரம் கம்பனடியாரின் — கம்பனடிப்பொடியார்களின்— ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளாகிக் கொடுமைக் காரியாய்க் காட்சி தரப்போகின்றேனே, யானறியேன் !



# ஆற்றல் சால் பெண்மை

சரசுவதி இராமநாதன்

அணிமாட அயோத்தி நகரில் அவதரித்துக் கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்து, அறந்தலை நிறுத்திய ஆதிப்பிரானின் வரலாற்றை என்றுமுள தென்தமிழில் இயம்பி இசை கொண்டவன் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அவனுடைய கவித்திறனை எண்ணி வியப்பதா- பாத்திரப் படைப்பைப் புகழ்வதா- நாடகத்திறனை நயப்பதா என்று பலரும் விம்முற்று நிற்கின்றனர். நானோ அவன் காட்டிய பெண்மை இலக்கை, அவன் போற்றிய பெண்மைச் சிறப்பை எண்ணிக் கிறுகிறுக்கிறேன். அதனால் சில கிறுக்குகிறேன்.

'காசலம்பு முலையவர் கண் எனும் அம்பும் நெறியின் புறம் செலாக் கோசலம்' எனும் போதே சமுதாய ஒழுக்க, அற நெறிக் கோட் பாட்டின் உயிர் நாடி பெண்கள்- என்பதை அடிக் கோடிட்டுக் காட்டிவிட்டான் கம்பன்- அந்தப் பெண்களை அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு எனும் அணிகலன்கள் உடையவர் என்று மட்டும் காட்டாமல் ஆற்றல்மிக்கவராகவும் காட்டியுள் ளான். ஆற்றல் என்ற சொல், சகிப்புத்தன்மை, பொறை, பெருமை, வலிமை, நோற்றல் என்ற பல பொருள்களைக் கொண்டது. பெருந்தடங்கண் பிறை நுதலாரிடம் இந்த ஆற்றல் எந்தெந்த வகையில் ஒளிவிட முடியும் என்று காட்டுவது கம்பனின் காப்பியம்.

### ஆற்றல்சால் கோசலை

ஆழ்வார் வாக்கால் 'மன்னு புகழ்' பெற்ற கோசலை, கம்பநாடுடைய வள்ளலால் ''ஆற்றல்சால் கோசலை'', ''திறம் கொள் கோசலை' என்றெல்லாம் பாராட்டப் படுகிறாள். கோக்கள் வைகும முற்றத்தான் முதல் தேவி என்பதாலோ, மூவுலகும் ஈன்றானை முன் ஈன்றானைப் பெற்ற பெருமையாலோ மட்டுமா இவள் புகழ் பெற்றாள்? இல்லை- இவளது ஆற்றல், சகிப்புத்தன்மையாக பெருந்தன்மையாக மலர்ந்து வெளிப்படுவதைப் பல இடங்களில் காண்கிறோம்.

தன்மகன் கோமுடி தரித்து வருவதை எதிர் பார்த்துத் தழைக்கும் உள்ளத்துக் கோசலையின் முன் குழைக்கின்ற கவரியும் கொற்ற வெண் குடையுமின்றித் தமியனாய் இராமன் வந்து வணங்குகிறான்.

ஐயம் கொண்ட கோசலை பிற மகளிர் நிலைக்கு மாறாக, நிதானமாகப் பேசுகிறாள். 'நினைந்ததென்? இடையூறுண்டோ நெடுமுடி புனைதற்கு?' பரதனே துங்கமா முடி சூடுகிறான் என்ற பதில் கேட்டும் ஆத்திரம் கொள்ளாத அந்தப் பெரியவள், 'முறைமை அன்று என்பது ஒன்றுண்டு; மும்மையின் நிறை குணத்தவன். நின்னினும் நல்லனால்' என்று பேசுகிறாள். மாற்றாள் மகன் தலையில் தன் மகனின் உரிமை முடி போகிறது என்று அறிந்தும் அவனைப் போற்றும் பண்பு எத்துணை உயர்ந்தது! வேறு எந்தத் தாயிடமிருந்தும் இச் சொற்களை எதிர் பார்க்க முடியாது. 'நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றிய' கோசலையாம் அன்னம் மட்டுமே இப்படிப் பேசமுடியும். 'உம்பிக்கு நானிலம் கொடுத்து ஒன்றி வாழுதி' என்று வாழ்த்தவும் செய்கிறாள்.

'ஏழிரண்டாண்டு அகன் கானிடை மாண்ட மாதவருடன் வைகி' வரச் சொன்ன தந்தையின் கட்டளையை இராமன் கூற, அதிர்ச்சியடைகிறாள் அன்னை. அப்போதும் அந்தக் கற்பரசி தன் கேள்வியில் அறிவும், கணவன்மீது அன்பும் சேர்ந்து தொனிக்க, ''அன்பிழைத்த மனத்து அரசற்கு நீ என் பிழைத்தனை?'' என்று வினவு கிறாள். (கணவனும், சக்கரவர்த்தியும், பாசமிக்க தந்தையுமான தசரதனைக் குறை கூறாமல், உன்னை நாடுகடத்திக் காடேகச் செய்ய நீ என்ன பிழை செய்தாய்' என்று கேட்பது அவளது கற்புச் சிறப்பைக் காட்டுகிறது.) மகனது பிரிவுக்காக மறுகும் அவள், கணவன் புகழுக்காகவும் அழிகிறாள். கன்று பிரி காராவின் துயருடைய தாய் ஆயினும், கணவன் உயிர்காக்க அவனுடன் இருக்க உறுதி கொள்கிறாள். இரண்டு கன்றினுக் கிரங்கும் ஓர் ஆப்போல் தவிக்கிறாள் கோசலை. அந்த நிலையிலும் கொடுங் கைகேசியிடம் வாயிழக்காமலும், அவளை ஏசாமலும் பொறுமை காக்கிறாள் தற்கொண்டான் புகழ் காக்க- பிரிய முடியாத மகனைப் பிரியவும் தயாராகிறாள். அவளது இந்த ஆற்றல்தான் பரதனை வாயாரப் புகழ வைக்கிறது. எண்ணில் கோடி இராமர்களும் பரதனுக்கு ஈடாக மாட்டார்கள் என்றும், பரதன் உயிர் போனால் வானும் மண்ணும் உயிர்களும் வாழா என்றும் வாயாரப் புகழ்கிறாள்.

மகன் கோமுடி துறந்து காடு நோக்கிப் பெயர்ந்ததும் நல்லதாயிற்று. 'கைவீரக் களிறனைய காளை' குகனோடு ஐவராக வாய்ப்புக் கிடைத்தது என மகிழும் கோசலை—'ஆற்றல்சால் கோசலை' எனப் பாடப்பெற்றது சரிதானே !

## தியாகப் பெருமை

மாமல்லபுரத்துச் சிற்பியின் கைவீச்சும். மொகலாயச் சிற்பியின் நுட்பமானவேலைத் திறனும் ஒருங்கே பரிமளிப்பது போன்றது கம்பனின் இராமாவதாரம். பெரிய, முதன்மையான-காப்பியம் முழுதும் வரக் கூடிய பாத்திரங்களைப் படைப்பதில் திறமை காட்டுவது போலவே, ஓரிரு காட்சியில் வரும் பாத்திரங்களிலும் நுட்பமான திறத்தைக் காட்டி விடும் சமர்த்தன் கம்பன். 'இளையமென் கொடி', 'இருவரையும் ஈன்று எடுத்தாள்' எனப்படும் சுமித்திரை நூலில் சில இடங்களிலேயே காட்டப்பெறுகிறாள். ஆனால் அவளைத் 'தூய சுமித்திரை,' 'சோகம்தீர்ப்பாள்', 'அறம்தானே என நின்றாள்' என்றெல்லாம் உயர்த்துகிறான் கம்பன். இந்தப் பெருமை யெல்லாம் அவளுக்கு எதனால் வந்தன? ஒப்பற்ற தியாகத்தால் வந்தவைதான். இரு பிள்ளைகளை ஈன்ற அந்த நல்லாள் இருவரையும் பிறருக்குத் தொண்டு செய்யவே விட்டாளே ! ஒருவன் பரமனின் அவதாரமாம் இராமனுக்கும் மற்றவன் பரம பாகவதனும் பரதனுக்கும், ஆளாயினர். தன்எதிரே இராமனும்,இலக்குவனும் வந்து நிற்கையில் கலங்குகிறாள் சுமித்திரை. தன் பொன்னடி தொழுத தன்மகன் இலக்குவனைப் பார்த்துச் சில சொற்கள் சொல்கிறாளே ! இலக்கிய வரலாற்றில் பொன் எழுத்துக்களில் பொறிக்கப்படவேண்டிய அடிகள் அவை !

''ஆகாதது அன்றால் உனக்கு அவ்வனம்
இவ்வயோத்தி
மாகாதல் இராமன் அம் மன்னவன்;
வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை
-என்றே
ஏகாய், இனி, இவ்வயின் நிற்றலும்
ஏதம் என்றாள்''

**(அயோத்தியா. நகர்நீங்கு படலம் 146.)**

தாயர் என்ற சொல்லில் தாய்மார்களாம் தங்கள் மூவரையும் உள்ளடக்கிப் பேசினாள். எப்படித் தொண்டாற்ற வேண்டும் என்றும் கட்டளையிடுகிறாள்.

''பின்னும் பகர்வாள், 'மகனே ! இவன்பின்
செல்; தம்பி
என்னும் படி அன்று; அடியாரினின்
ஏவல் செய்தி.
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா;
அது அன்றேல்
முன்னம் முடி' என்றாள்; வார்விழி சோர
நின்றாள்''

**(நகர் நீங்கு படலம் 147)**

இராமனைக் காத்து, அல்லது சாக்கத் தன்மகன் உயிர்தந்தாலும் நலம் என்று கருதும் தியாகத் தாய் இவள். இராமனுக்கு ஆபத்து என்று நினைக்கவும் முடியாமல் கண்ணீர் வடித்த பாசதீபம் பரிவுச் செல்வம் தன்மகன் உயிரையும் தியாகம் செய்யத் தூண்டுகிறதே ! அதுவல்லவோ இப்பெண்ணின் தனிச் சிறப்பு ! அதனால்தான் இலக்குவன் போர்க்களத்தில் விழுந்து கிடப்பது கண்ட இராகவன், 'அன்னை முன்னம் முடி என்ற சொல்லை நிறைவேற்றி விட்டாயா!' என்று கதறுகிறான்.

## இனிய செய்யும் ஆற்றல்

கோசலத்துப் பெண்களின் சிறப்பைக் காட்டியது போலவே கிட்கிந்தைக் குரக்கினத்துப் பெண்மையிலும் சில சிறப்புக்களைக் காட்டுவான் கம்பன். அரசியலறிவு, வருவதுணரும் ஆற்றல் இவற்றிற் சிறந்த தாரை வாலியின் அருமருந்தனைய தேவி. துன்னிய அன்பினர் சொல்லக்கேட்டு, வாலியைத் தம்பியுடன் போருக்குப் போக வேண்டாம் என்று தடுக்கிறாள். அவளை ஏசிவிட்டுச் சென்ற வாலி இராமனது வாளியால் வானுக்கப்புறத்தனாகிறான். வாலியைப் பிரிந்த தாரையின் வாழ்வு மைந்தனுக்காகவும் பிறருக்காகவும் அமைகிற அருள் வாழ்வு. அப்பொன் மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கிக் கைம்மைத் தவம் புரிந்த அவளது ஆற்றலையும் அழகுறக் காட்டுகிறான் கவிச்சக்கரவர்த்தி.

சுக்கிரீவன் கார்காலம் முடிந்தபின்னும் வானரப் படையுடன் தேவியைத் தேட முயற்சி மேற்கொள்ளாது அயர்ந்து, மது மயக்கத்தில் மதிமயங்கியிருக்கிறான். இளவலை ஏவி, சுக்கிரீவனின் செய்நன்றி மறந்த தன்மையை நினைவூட்டச் சொல்கிறான் இராமன். இளைய பெருமாள் வந்த வேகத்தை வேறு யாரும் மாற்ற முடியாது என்ற நிலையில் தாரைதான் முன்வந்து உதவுகிறாள். தன் கணவனைக் கொல்லக் காரணமான சுக்ரீவன், தனக்கு இந்த நிலை

ஏற்படக் காரணமானவன் என்றும் கருதாது, இன்னா செய்த அவனுக்கும் இனிய செய்ய முன் வரும் அவளது பெருமை கடலினும் பெரிது.

'பார்குலா முழுவெண் திங்கள் பகல்வந்த
படிவம் போலும்
ஏர்குலா முகத்தினாளை இறைமுகம் எடுத்து
நோக்காத்
தார்குலாம் அலங்கல் மார்பன் தாயரை
நினைந்து நைந்தான்'
**(கிட்கிந்தைப்படலம்—51)**

மங்கல அணியின்றி - மணியணி துறந்து குங்குமம் சாந்தம் அணியாத மார்பகங்களையும் கழுத்தையும் போர்த்திய ஆடையுடன் கைம்மைக் கோலம் கொண்டு எதிர் நின்ற நங்கை தாரை, இலக்குவனின் உள்ளத்தில் சீற்றம் மாறி அருள் பொங்கச் செய்தாள். அவனது தாயரை நினைவு படுத்தும் அளவு இரக்கம் தரும் கைம்மைக் கோலத்தில் காட்சி தரும் தாரை குரக்கினத்தினும் பெண்மையின் பெருமை, கற்புத்திண்மை உண்டு என்று காட்டிவிடுகிறாள். அவளது ஆற்றல், இன்னா செய்த கூட்டமான சுக்ரீவன் அனுமன் போன்றவர்க்கும் இனிய செய்யும் பண்பாக மலர்கிறது. தன் கணவனைக் கொன்ற தன் அண்ணனையே மூலநாசம் பெற முடித்த சூர்ப்பணகை எங்கே? தாரையின் சால்பு எங்கே! என்று ஒப்பிட்டுப் பார்க்க வைக்கிறானே கம்பன்!

### பாசமா? கற்பா?

சந்தன மரமாம் இராமனைச் சுற்றித் தழுவிய முல்லை சீதை என்றால் கருவேலமரமாம் இராவணனைப்பற்றிப் படர்ந்த முல்லை மண்டோதரி. மயன்மகளாம் இவள், தசமுகனை நினைத்ததேயில்லை என்றான் கம்பன். ஏன்? மறந்தால் தானே நினைப்பதற்கு! 'நினைத்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள்' அவள். தன் கணவன் பிறன்மனை விழைந்த பெருங்குற்றம் செய்தும் அவனைக் கடிந்து பேசாத கற்பரசி இவள். இவளது பொறை எல்லைகடந்தது; பூமி தேவியை ஒத்தது. தன் காமத்திற்காக அக்கனை, அதிகாயனை, கும்பனை — மற்றும் உள கிளைகளை அடுக்கடுக்காய்ப் பலிதந்தான் தசமுகன். கடைசியில் 'கோள் இரண்டையும் கொடுஞ்சிறை வைத்த குமரனும்' இந்திர சித்தனையும் இழந்தான். இந்த நிலையில் பாசமிக்க தாயான மண்டோதரி கற்பறம் வழுவாத நிலையை அழகுறச் சித்திரிக்கிறான் கம்பநாடுடைய வள்ளல். அந்தநிலையில் மகனை இழந்தசோகத்தினால் அவள் தன் கணவனை ஏசினால்கூடத் தவறில்லை எனலாம். (தானிய மாலை, அதிகாயனை இழந்தபோது 'பேதையாய்க் காமம் பிடித்து உழல்வாயோ!' என்று ஏசவும் செய்தாளே!) ஆனால் மண்டோதரியோ,

''பஞ்செரி உற்றதென்ன அரக்கர்தம் பரவை
எல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே
மீண்டதில்லை!
அஞ்சினேன் அஞ்சினேன் அச்சீதையென்
றமிழ்தாற் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித்
தகையன் அன்றோ!'

**(இராவணன் சோகப்படலம் 53)**

என்று, மறுநாள் தன் கணவனுச்கு இந்தநிலை வந்துவிடுமே என அஞ்சும் கற்பின் மிக்காளாகக் காட்சி தருகிறாள். தன்கணவன் இறந்து கிடந்த போதும் 'இராவணனார்' என்று பேசுவாள். அவன் உடலை இராமபாணம் துளைத்தது என்று சொல்லவும் நடுங்கி, 'உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி!' என்று புலம்பும் இவளது பெருமை — நாயன்மார்களாலும் சிறப்பிக்கப் பட்டதன்றோ?

### தவம் செய்த தவம்

காவியத்தலைவி சோகத்தாளாய நங்கையாய் அசோக வனத்தில் சிறையிருந்த நிலை தேவர்க்கும் அசோக நிலையைத் தந்தது. 'இலங்கையில் பிராட்டியையா கண்டேன்! இற்பிறப்பும் இரும் பொறையும் கற்பும் களிநடம் புரிவதையன்றோ கண்டேன்' என்கிறான் அனுமன். ஆம்; தேவியின் பொறுமைதான் கற்பையும், குடிப்பிறப்பையும் காத்தது. பசியை மட்டுமா ஆற்றியிருந்தாள் தேவி! பிரிவுத்துயரை மட்டுமா ஆற்றியிருந்தாள்! தன் அனைத்துத் திறமையையும், கற்பு வலிமையையும், அடக்கியிருந்த ஆற்றல் மிகப் பெரிதன்றோ! அந்தப் பொறுமையல்லவா தேவி யின் பெருமை! அனுமன், தேவியைத் தன் தோளில் ஏறி வரச்சொன்னபோது அவனுக்குப் பலவகையில் சமாதானம் சொன்ன தேவி, ஒரு உண்மையையும் தெளிவுபடுத்துகிறாள்.

''அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லி னால்சுடு வேன்அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசி
னேன்!''

**(சூடாமணிப்படலம் 18)**

உலகெலாம் சுடும் ஆற்றலும், கற்புத் திறனும் தனக்கு உண்டு எனினும் தன் கணவன் வில்லின் ஆற்றற்கு மாசு வரக்கூடாதே என்பதற்

காகப் பொறுமை காத்து நிற்பதாகப் பிராட்டி சொல்வது உண்மை. இந்தச் சீதையாம் தையல் தன்கற்பின் திறனல் இராவணனை வென்று மீண்டிருந்தால் இராமன் விஜயராகவனுக, ஜெய ராமனுக இருக்கமுடியுமா என்கிருர் தியாகப் பிரம்மம்.

(மாஜானகி செடபெட்டக—என்ற காம்போதி ராகக் கீர்த்தனையில்.)

கணவன்புகழ் காக்கவே பொறுமைத் தவம்பூண்ட, நோற்ற, பேராற்றல் பெருந்தக்க பெண்ணும் சானகியிடம் அமைந்திருக்கிறது.

ஒரு சில

கூனியின் சொல்லாற்றலை, சூர்ப்பணகையின் நினைத்ததை முடிக்கும் ஆற்றலை (கொல்லாத மைத்துனனைக் கொன்ருய் என்று பல்லாலே இதழ் அதுக்கிப் பழி தீர்த்த செயல்.) இவற்றையெல்லாம் விட்டு மங்கை நல்லாரின் மற்றைய சிறந்த ஆற்றல்களை மட்டுமே இங்குக் காட்ட விழைந்தேன். பெண்மையின் ஆற்றலைப் போற்றிய கம்பன் புகழ் வாழ்க!.

# கம்பன் கண்ட ஆன்மநேய ஒருமை

(அருட்பா S. R. தங்கவேலு)

பக்தியை அடிப்படையாகக்கொண்ட வைணவம் ஆறு குணநலன்களை இறைவனுக்குச் சூட்டி மகிழும். அவைகள் கிருபை (அளி) க்ஷமை (மன்னித்தல்), சௌசீல்யம் (இனிமை), சௌலப்யம் (எளிமை), வாத்ஸல்யம் (பிரேமை), சௌகுமார்யம் (அழகு) எனப்படும். இவ்வாறனுள் இனிமையும் எளிமையும் அழகும் இராம காதையில் உயிரோட்டமாக அமைகின்றன.

இந்த உலக வழக்கிலேயே பார்ப்போமே ஒரு கோடீஸ்வரன் இனியவனாகவும் எளியவனாகவும் இருப்பானானால், அப்பெருந்தகை இருக்குமிடம் பூலோக சுவர்க்கமன்றோ? பின்னர், இப்பேரண்டங்களையெல்லாம் படைத்துக் காக்கும் ஒருவன் கண்ணுக்கு இனியவனாகவும், கருத்திற்கு இனியவனாகவும் பரம சுலபனாகவும் இருந்துவிட்டால் இந்நிலையை எவ்வண்ணம் வார்த்தைகளால் வர்ணிப்பது! உண்மையாகவே நாலாயிர திவ்யப்பிரபந்தம் மூல முதல்வனது சௌலப்யத்தையும் சௌசீல்யத்தையும் முழுக்க முழுக்க அற்புதமாகப் பேசுகின்றது. இதை அடியொற்றியே கம்பநாட்டாழ்வாரும் இராமனது அளியையும், எளிமையையும் இனிமையையும் தேனாய், இன்னமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்ப் பாடுகின்றார். பக்தி உலகிற்கே வக்காலத்து வாங்கிக்கொண்டு, ''யாராலும் காண்டற்கு அரியான் எமக்கு எளியான்'' என்று இறும்பூது கொண்டு அருள் எக்காளம் ஊதுகின்றார் மணிமொழிப் பெருமான்.

எல்லா வல்லபங்களையும் சௌபாக்கியங்களையும் ஒருசேர வாய்க்கப்பெற்ற ஒருவன் சுலபனாகவும இனியனாகவும் இருந்துவிட்டால் அவனிடம் ஆன்மநேய ஒருமை அடைக்கலம் புகுமன்றோ? இப்பேரண்டத்திலுள்ள எல்லாப் பொருள்களையும், அஃறிணை, உயர்திணை என்றில்லாது எல்லாவற்றையும் அரவணைத்துச் செல்வானன்றோ?

வான்மீகி பகவான் இராமனிடம் ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு குணங்களும் பூரணப் பொலிவோடு மிளிர்வதைக் கண்டார். கம்பநாட்டாழ்வார் அவனிடம் இனிமையும் எளிமையும எல்லாவற்றையும்விட அதிகம் பூத்துக் குலுங்குவதைக் கண்டார். எனவே, கம்பரது இராமன் பேரழகன்; பரம சுலபன்; கண்ணுக்கும் கருத்துக்கும் இனியவன். ''மனத்திற்கு இனியான்'', ''கண்ணிற்கு இனியான்'' என்று ஆண்டாள் நாச்சியார் கண்ணனை அனுபவிக்கும் பான்மையை கம்பர் அறிவாரன்றோ?

ஆக, இராமன் ஆன்மநேய ஒருமைப்பாட்டிற்கு ஓர் இலக்கியமாகத் திகழ்ந்தான். இந்தப் பரந்த பொது நோக்கை மையமாகக்கொண்டு கம்பர் பெருமான் தமது காவியத்தைப் புனைகின்றார். இவரை இக்கருத்திற்கு ஊக்கியதே நம்மாழ்வாரது அற்புதத் திருப்பாசுரமாகும். இதோ அந்தத் தேன் மதுரத் திவ்யப் பாசுரம்:

> ''கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ?
> புற்பா முதலாப் புல்லெனும் பாதி யொன்றின்றியே
> நற்பால் ஆயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
> நற்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே.''
>
> (திருவாய்மொழி)

ஒரு கண்ணோட்டத்தோடு பார்த்தால் இராம காதையே இப்பாசுரத்தின் விரிவுரையாகவே தோன்றுகிறது!

ஆழ்வார்களது பாசுரங்களை கம்பன் அப்படியே விழுங்கியிருக்க வேண்டும். இல்லையென்றால் ஆழ்வார்களோடு அப்படியே கருத்தொருமித்துப் பாட எப்பாங்கில் ஏலும்? மேலே கண்ட நம்மாழ்வார் பாசுரத்தில், இராமன் தான் அயோத்தியில் பிறந்த ஒரே காரணத்தினால், அத்தேச தாவர சங்கம எல்லாப் பொருள்களுக்கும் மோக்ஷ சாம்ராஜ்யத்தைக் கொடுத்தான். தாவரங்களில் கடையான புல் முதலானவைகளுக்கும் சங்கமங்களிற் கடையான எறும்பு முதலானவைகளுக்கும் இராமன் பரமபதம் அருளினன் என்ற பெருங்கருணை நமது ஊனையும் உயிரையும் உள்ளத்தையும் உருக்குகின்றது.

மற்றும் இது போன்ற கருத்துகள் ஏராளமாகக் காணக்கிடக்கின்றன ஆழ்வார் பாசுரங்களில். இத்தகைய கருத்துகளின் அடிப்படையிற்றான் கம்பன் தமது இராமனை பேரழகுப் பெரும்பொருளாகவும் பரம சுலப னாகவும், எப்பொழுதும் இனியனாகவும் காட்டு கின்றார்.

ஆழ்வார்களது சில கருத்தோவியங்களை நாம் காண்போமேயானால், பின்னர், கம்பர் எப் பாங்கில் இராமனை அவ்வண்ணமே உலகிற்குப் புலப்படுத்துகின்றா ரென்பதை எளிதில் அறிய லாம்

கண்ணன் ஆய் குழல் ஊதும்பொழுது இப் பிரபஞ்சத்திலுள்ள அத்துணை உயர்திணை, அஃறிணைப் பொருள்களும் பரவசமெய்துகின்றன என்று பெரியாழ்வார் என்ன அற்புதமாகப் பேசு கின்றார். மரங்களும் கொம்புகளும் மலர்களுங்கூட இயங்குகின்றனவாம் !

''கருங்கண் தோகை மயிற்பீலி யணிந்து
கட்டிநன்கு உடுத்த பீதக ஆடை
அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவன்ஒரு வன்குழல் ஊதின போது
மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும்வளர் கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே''
(பெரியாழ்வார் திருமொழி)

கண்ணனது முரளியின் ஜகன்மோகன இசைப் பெருவெள்ளத்தில் புல்லும் பூடும் கல்லும் மண்ணுங்கூட ஆழ்ந்து ஆனந்தப் பரவச மடைகின்றன என்பது பெரியாழ்வார் வலியுறுத் தும் எண்ணம்.

ஆண்டாள்

''குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன் தன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன் தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே
இறைவா! நீ தாராய் பறைஏலோர் எம்பாவாய்''
(திருப்பாவை)

என்று பாடும் பொழுது ஓர் அற்புதமான தத்து வத்தை மையமாக வைத்துக் காட்டுகின்றாள். பகவானுக்கும் ஆன்மாக்களுக்கும் உள்ள சம்பந்தம் அநாதியும் நித்தியமும் ஆனது, அதைப் பகவானாலும் ஆன்மாக்களாலும் தனித்தனியாக வும் சேர்ந்தும் ஒழிக்க முடியாது என்ற ஒரு உயர்ந்த தத்துவம் இங்கு காட்டப்படுகின்றது. ''என்று நீ அன்று நான்'' என்று ஓர் அருளாளர் பேசுவார். அது மட்டுமல்ல. கோகுலத்திலே கோபாலர்கள் கண்ணனை ''டே இடையா'', ''டே கண்ணா'', ''டே கோபாலா'' என்றெல்லாம் சிறு பெயர்கள் வைத்து அழைத்திருக்கலாம். ஆனால், இவன் யார் ? உலகமுண்ட பெருவாயன். இவ் வளவு பெரியவன் எவ்வளவு தன்னைத் தாழ்த்திக் கொண்டு எளியனானான் ! அங்கையில் நெல்லி யெனத் தெளிவாகவும் எளியனாகவும் விளங்கு கின்றான் !

ஆழ்வார்களிலே கடைசியாக வந்த ஆலி நாட்டுக் கோமான் திருமங்கை மன்னர், இராமனது எளிமையையும் இனிமையையும் என்னமாகத்தான் பேசுகின்றார் ! ''மிகவும் மிலேச்சனான குகனை ஆட்கொண்ட நின் கருணைத் திறம் ஒன்றினாலல்லவா நான் ஊக்கம் பெற்று நின் பொன்னார் திருவடிகளை அடைக்கலமாகப் பற்றுகின்றேன்' என்று இவர் சொல்லும் அழகே அழகு ! வைணவ உலகிற்கே அணி செய்யும் ஒரு ஆனந்தத் தனிப் பாட்டு.

''ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து
மாழை மான்மட நோக்கிஉன் தோழி
உம்பி எம்பிஎன்று ஒழிந்திலை உகந்து
தோழன்நீ எனக்கு இங்குஒழி என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட
ஆழி வண்ண!நின் அடிஇணை அடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம் மானே!''

(திருமங்கை ஆழ்வார் – பெரிய திருமொழி)

''இலக்குவன் உனக்குத் தம்பி. சீதை உனக்குத் தோழி. நீயும் எனக்கு உற்ற நண்பன்'' என்று இராமன் குகனைப் பார்த்துச் சொன்னான். ஆனால், இக்குகன் யார் ? ஞானமில்லாதவன். அன்னியன், தாழ்ந்த ஜாதியான்.

ஆம் ! இப்பாசுரமும் கம்பனுக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்திருக்க வேண்டும் !

இப்பொழுது பார்ப்போம், கம்பன் கை வண்ணத்தை ! ஆழ்வார்கள் பாதையிலே செல் லும் அற்புதத்தை !!

சககரவரத்தித் திருக்குமாரன் அரண்மனையிலுள்ள எல்லாரோடும் எளிமையாகவும் இனிமையாகவும் பழகுகின்றான். மந்தரையோடு பழக வேண்டிய எந்தச் சூழலும் இராமனுக்கு இல்லை. இருப்பினும், அவளோடு பழகுவது மட்டுமன்றி சிறு சிறு குறும்புகளுங்கூடச் செய்திருக்கின்றான். அவளது கூன் முதுகின் மீது களி மண் உருண்டைகளை வீசி விளையாடியிருக்கலாம். இதைப் பெருந்தீங்காக அவள் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. இராமனது அழகையும் எளிமையையும் காண்போர் யாரே இவற்றையெல்லாம் பொருட்படுத்துவர்? இதை வெகு சமத்காரமாகக் காட்டுகின்றார் கம்பர் பெருமான்:

''அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்அருள் துறந்தனள் தூமொழி மடமான்
இரக்கம் இன்மையன்றோ இன்று இவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே''

(அயோத்தியா காண்டம்)

கூனியும் கைகேயியும் கெடுதல் செய்தாலும், அது பெருமையாகவே முடிந்தது. இன்று உலகம் இராமாமிர்தத்தைப் பருகிப் பரவசமடைகின்றதன்றோ?!

இராம காதையிலே பறவைகள், குரங்குகள், கரடிகள், வேடர்கள், வேட்டுவிச்சிகள், அரக்கர்கள், அரக்கிகள், தேவர்கள், திக்குப் பாலகர்கள், விண்ணுலக வாசிகள், ரிஷிகள், ரிஷி பத்தினிகள் முதலிய எல்லோரும் வருகின்றார்கள். இவர்கள் எல்லோரும் பேசுகின்றார்கள். இராமனோடு ஆன்ம நேயம் கொள்ளுகின்றார்கள். ஆம்! ஒரு காவியம் பூர்ணத்துவம் பெற இந்த அம்சங்களெல்லாம் அவசியம். ஓர் அமர காவியம் விண்ணையும் மண்ணையும் இணைக்கும்.

உலக மகா காவியங்களாகிய ஹோமரின் ''இல்லியத்'', ''ஒதஸி'', வெர்ஜிலின்-''ஈனியத்'' மில்டனின் ''பாரடைஸ் லாஸ்ட்'' போன்றவற்றில் உயர்திணைப் பொருள்களும் அஃறிணைப் பொருள்களும் மனிதர்களும் தேவர்களும், நரகமும் சொர்க்கமும் வந்து வந்து போகின்றன. மனிதர்கள் தேவ இயல்புகளோடும், தேவர்கள் மானிட குணங்களோடும் மாறி மாறி நம்மை மயக்குகின்றார்கள்.

ஏன்? இராமகாதையிலேயுங்கூட, வான்மீகி, இராமனை ஒரு மனிதனாகவேதான் காண்கின்றார். ஆனால், கம்பநாட்டாழ்வார், முதலிலிருந்தே அவனைப் பரம்பொருளாகவே காண்கின்றார் எனினும், சிற்சில கட்டங்களில் இராமன் அழுதும் சிரித்தும், 'மானிடம் வென்றதம்மா!' என்று சொல்லும் நிலைக்கு இறங்குகின்றான். ஆம்! இவைகளெல்லாம் ஒரு காவிய மாளிகைக்கு வேண்டிய மூல அங்கங்கள்.

அகலிகை சாப விமோசனம் கல் பேசும் ஒரு கட்டம். வேதத்திலே ஒரு ரசமான கட்டம் வருகின்றது. இரண்டு ரிஷிகள் நடந்து செல்லும் பொழுது ஒருவரின் கால் தற்செயலாகப் பட்டு ஒரு மண்கட்டி உடைந்துவிட்டதாம். உடனே அவர், ''ஐயோ! சற்று வரைக்கும் வண்ணமாக வீற்றிருந்த மண்கட்டி என் கால் பட்டு உருக்குலைந்து வாடுகின்றதே'' என்று தேம்பித் தேம்பி அழுதாராம். கதை எப்படியிருந்தாலும் கல்லுக்கும் மண்ணுக்குங்கூட உயிருண்டு என்னும் தத்துவம் இங்கு விளக்கப்படுகின்றது. ஆன்ம நேயம் இங்கு ஆரம்பிக்கின்றது.

கதைப்போக்கு எப்படியிருந்தாலும் இங்கு கல் உயிர் பெற்றெழுகின்றது, பேசுகின்றது, இயங்கமிருக்கின்றது. கம்பரது இமயம் போன்ற ஆன்மநேயம் துல்லியமாக, எடுத்த எடுப்பிலேயே இங்கு ஆரம்பமாகின்றது. அகலிகை கதையிலே விண்ணும் மண்ணும் இணைகின்றன. தேவர் கோன் மண்ணிற்கு இழிகின்றான்.

குகன் ஒரு வேடன். அங்கியன்: மிலேச்சன்: ஞானமில்லாதவன். ஆனால், இராமன்மீது அவன் கொண்ட காதற் பெருவெள்ளத்திற்கு அணைபோட யாரே வல்லார்! கங்கு கரையற்ற அன்பினாலே என்னென்னவோ பேசுகின்றான் குகன். அவைகளையெல்லாம் செவிமடுத்த பின்னர் இராமன் அவனுக்குக் கூறும் அன்பு மொழிகள் எத்துணை இனியன! எளியன?

''என்உயிர் போன்ற குகனே, இதோ பார், என் தம்பி இலக்குவன் உன் தம்பி. இச்சீதை உன் மைத்துனி, இந்த உலகமெல்லாம் உன்னுடையது, நானும் உனக்கு உரிமையுடையவன்'' என்று இராமன் பேசும் பாங்கு போல வேறு உலக இலக்கியங்கள் எதிலுமில்லை.

''அன்னவன் உரை கேளா, அமலனும் உரை தேர்வான்
'என் உயிர் அனையாய் நீ'! இளவல்உன் இளையான் இந்

நன்னுதலவள் நின்கேள், நளிர்கடல்
நிலம் எல்லாம்
உன்னுடையது நான்உன் உரிமையின்
உளேன்'என்ன''

(அயோத்தியா காண்டம்).

சுக்ரீவன் ஒரு குரங்கு வேந்தன். அண்ணன் வாலிக்குப் பயந்து மலையிலே ஒளிந்து வாழ் கின்ருன். அவனோடு இராமன், அனுமன் மூலமாக நட்புக் கொள்ளுகின்ருன். கண்ட மாத்திரத்தி லேயே அவனை எடை போட்டுவிட்டான் இராமன். மனத்தால் மிகவும் நொந்து சோர்ந்து போன சுக்ரீவனுக்கு எவ்வளவு இங்கிதமாக இதமாகச் சொல்லி வீறு கொள்ளச் செய் கின்ருன் ?

''ஒன்றுக்கும் பயப்படாதே நான் இருக் கின்றேன். நாம் பரஸ்பரம் ஒருவர்க்கொருவர் உதவி செய்துகொள்ளுவோம்'' என்று அபயம் அளிக்கின்ருன் இராமன்.

''சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்னநின்றன எனக்கும் நிற்கும் நேர்'' என இராகவன் சுக்ரீவனைத் தட்டிக்கொடுத்து உற்சாகப்படுத்துகின்ருன். இந்த குரங்கையும் தன் உடன்பிறப்பாகக் கொள்ளுகின்ருன் !

அனுமனைப் பொறுத்தவரையில் பக்தி உலகில் அவனை தாஸ்ய பாவத்தின் உருவம் என்று காட்டுவார்கள். ஆனல், இராமனுக்கும் அனுமனுக்கும் இருந்த அந்த உறவு இருக்கின்றதே அது, தாஸ்யம், சக்யம், வாத்ஸல்யம் மதுரம் என்று பக்தித் துறையிலுள்ள எல்லா பாவங் களையும் கடந்து நின்ற ஒரு மாபெரும் உன்னதப் புனித நெறி. பரத்வாசர் ஆஸ்ரமத்திலே ஒரே இலையில் இராமனும் அனுமனும் உண்டனர். இராமன் பட்டாபிஷேகத்திலே, அனுமனுக்கு அவன் தகுதி அறிந்து என்ன கொடுப்பதென்று யோசனை செய்து, பிறகு தன்னையே கொடுத்தான் கோசலை நாட்டு வள்ளல்.

பல பாத்திரங்கள் வாயிலாக இராமனது ஆன்மநேய ஒருமைப்பாட்டைக் காட்டும் கம்ப நாட்டாழ்வார், வீடணன் மூலமாக அதியற்புத மாக இந்நிலையைக் காட்டுகின்ருர் ''கரங்கள் மீச்சுமந்து செல்லும் கதிர்மணி முடியின் கல்லும் மரங்களும் உருக நோக்கும் காதலன்'' என்று கம்பர், வீடணனை நமக்கு அறிமுகம் செய்து வைக்கின்ருர். ஆம், இவன் அரக்கனேயாயினும் இராவணன் தம்பியேயாயினும் அறத்தின் சொருபமாகவே தோன்றுகிருன்.

இராமன் இப்பொழுதே முதன்முறையாகக் காணப்படும் வீடணனை மார்புறத் தழுவிக் கொள்கின்ருன். இந்த நெஞ்சையள்ளும் காட்சியைக் கம்பர் ''மண்ணில் மார்புற வணங்கினனைப் பொழிந்தது ஓர் கருணை தன்னல் புல்லினன் என்று தோன்ற எழுந்து 'இனிது இருத்தி' என்ன மலர்க்கையால் இருக்கை ஈந்தான்''[3] என்று சொல்லிக்காட்டுகிருர்.

இராமனது ஆன்மநேய ஒருமையின் முழுப் பொலிவை இதோ இப்பாட்டில் காணுகின்ருேம்.

''குகனொடும் ஐவர் ஆனேம்;
முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்;
எம்உழை அன்பின் வந்த
அகன்அமர் காதல் ஐய!
நின்னொடும் எழுவர் ஆனேம்
புகல்அரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் நுந்தை''

(யுத்த காண்டம்)

இராமன், கழுகின் வேந்தனுகிய ஜடாயுவிற்கு தனது தந்தைக்குச் செய்வது போன்றே ஈமக் கடன்களைச் செய்கின்ருன். சேது கட்டும் பணி யில் உதவிய ஒரு அணிலையும் இராமன் அன் போடு எடுத்துத் தடவினன் என்றும், அதனல் அதன் உடலில் மூன்று வரிகள் விழுந்துள்ளன வென்றும் ஒரு வரலாறுண்டு. தொண்டரடிப்பொடி ஆழ்வார் இந்த வரலாற்றைச் சொல்லுகின்ருர்.

இவ்வண்ணமாக இராமச்சந்திர மூர்த்தி ஆன்மநேய ஒருமையின் தனிப் பெரும் கலங்கரை விளக்கமாக விளங்குகின்ருன்.

காலத்தால் வள்ளலார் பிற்பட்டவரேனும் தெய்வ வாக்குகள் காலத்தையும் இடத்தையும் கடந்தன. ''உலகத் திரளெலாம் மருவிக் கலந்து வாழ்வதற்கு வாய்த்த தருணம் இதுவென வாயே பறையாய் அறைகின்றேன் எந்தாய் கருணை வலத்தாலே'' என்ற வாக்கு எத்துணை இன்பம் பயக்கின்றது. இந்த உலகின் நீண்ட நெடிய வரலாற்றிலே இராமனைப் போன்ற ஆன்ம நேயம் பொலியும் ஒரு வேறு பெயர் உளதோ? அப்பர் பெருமான் இறைவனை ''நின்னுவார் பிறரன்றி நீயே ஆனய்'' என்று அழகாகச் சொல்லுவார். அதே பாங்கிலே இராமனுக்கு இணை இராமனே தான்!

# கிறுக்கில் வளரும் மொழிகள்

''கம்பராமன்'

"கருத்திலான் கண்ணிலான் ஒருவன் சித்திரம்
திருத்திஞல் பெரியவர் சிறிப் பாய்வரோ ?"

கவிச்சக்கரவர்த்தி ''பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ'' என்ருன். அவ்விலக்கணத் திற்கு இலக்கியம் இதுவரையிலும் அமையாத குறையை இக்கட்டுரை நிறைவு செய்யும்.

நான் பல்லாண்டுகளாகக் கவிச்சக்கரவர்த்தி யின் அரண்மனையில் வாழ்கிறேன். அவ்வப் போது அவ்வரண்மனையில் பழுதுபட்ட இடங் களைக் காண்கிறேன். திருத்த நினைக்கிறேன். திருத்த முடியாமல் திகைக்கிறேன். பல திருத்தங் களுக்குப் பாடபேதச் சான்று கிடைக்கவில்லை. விராதன் வதைப் படலத்தில் சீதை, விராதனை நோக்கி, ''என்னையே நுகர்தி'' என்றனள். ''என்னையே உணவு கொள்கென'' என்ற பாட பேதம் உள்ளது. நுகர்தி என்ற பாடபேதம் சுவடியின் பாடம் அன்று. பூமகள் விலாஸப் பதிப்பின் பாடம். சீதை ''என்னையே நுகர்தி'' என்று சொல்ல மாட்டாள். நிச்சயம். ஆதலின் ''உணவு கொள்கென'' என்ற பாடமே ஏற்றது. இப்பாடத்தை இரண்டு சுவடிகள் ஏற்றுக்கொள் கின்றன. நுகர்தல் என்ற சொல்லுக்கு உண்ணு தல் என்று பல்கலைக்கழகம் உரை செய்துள்ளது. இப்பொருள் ஆய்தற்குரியது.

அங்கதனிடத்தில் இராவணன் உன் தந்தை யும் நானும் நெருங்கிய நண்பர்கள். அதற்கு ''ஓங்கு அறச் சான்றும்'' உண்டு என்கிருன். இரண்டு கொடியவர்கள் நட்புக்கொள்ளும்போது அவர்களுக்கு இடையில் அறம் சான்ருக நிற்குமா? வால்மீகியில் வாலியும் இராவணனும் அனல் சான்ருக* நட்புக்கொண்டார்கள் என்று கூறி யுள்ளது அறிஞர்கள் அனைவரும் அறிந்த ஒனறு. ஆதலின், ''ஓங்கனல் சான்று உண்டால்'' என்று. மாற்றலாமோ என்று தோன்றுகிறது.

இராம காதையில் இராமபிரானின் திருமேனியின் பொலிவினை அனுமன் நயம்பட விவரிக்கிருன். அப்பாடல்களில் தலைமை தாங் குவது, இராமபிரானின் நடை அழகைப் பாடு கின்ற பாசுரம் அதில் ஒரு எழுத்து பெரிய இலக்கணப் பிழைக்குக் காரணமாய் இருக்கிறது. இராமன் ''பெருஞ்செல்வம் எதிர்ந்த ஞான்றும் அஃது இன்றி அல்லல் ஏற்ற கானகத்தும் அழி யாத நடையை உடையவனுய் இருந்தான்'' என்று அப்பாசுரம் குறிக்கிறது.

''நான் நேற்றைய தினத்திலும் வீட்டிலும் மகிழ்ச்சியாக இருந்தேன்'' என்று யாரும் பேச மாட்டார்கள். நான் நேற்றைய தினத்திலும், அதற்கு முந்திய தினத்திலும் மகிழ்ச்சியாக இருந் தேன் என்பார்கள், அல்லது வீட்டிலும், காட் டிலும் மகிழ்ச்சியாக இருந்தேன் என்பார்கள். கானகத்தும் என்ற சொல்லைக் காலத்தும் என்று மாற்றிவிட்டால் கவிதை திருத்தம் பெறும் என்று நினைக்கிறேன். இப்பாடபேதத்தில் விருப்பம் இல்லாதவர்கள் ''கானகத்தின் அடைந்தபோதும் அடல் அமைந்த'' (அடல் அமைந்த என்பதற்குப் பதில், அழியாத என்று இருக்கலாம்) என்ற இந்தப் பாடத்தை ஏற்றுக்கொள்ளலாமல்லவா ? இப்பாடபேதம் 25-ஆம் எண்ணிக்கையுள்ள சுவடியின் பாட பேதத்தில் உள்ளது.

பிரமன் நரசிம்ம மூர்த்தியைப் புகழ்கின்ற பாசுரம் அனைத்தும் உபநிடதச் சாரமாய் உள்ளன. அதில்,

''எல்லா உருவமுமாய் நின்றக்கால்,
இவ்உருவம்
வல்லை படைத்தால், வரம்பு இன்மை
வாராதோ ?''

என்றிருக்கிறது. இப்பாடம் வேதாந்தப் பொருளை உணர்ந்தவர்க்கு மிக்க மாறுபாடாகத் தோன்றும்.

வியாசர் பதினெண் புராணங்களை இயற்றிய பிறகு பிரமத்திடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாராம். ''உருவம் இல்லாத உனக்கு உருவம் படைத்ததையும், வரம்பு இல்லாத உனக்கு வரம்பு சமைத்ததையும், பெயரில்லாத

* சிறியன சிந்தியாதான்-18 ஆம் பக்கம்,

உனக்குப் பெயர் குறித்ததையும் மன்னித்துக் கொள்'' என்றாராம்.

''பெருமானே! நீ எல்லா உருவமுமாய் இருக்கிறாய். நீ வரம்பு கடந்தவன். நீ ஒரு வடிவத்தில் வந்தால் உனக்கும் வரம்பு வந்துவிடுமே!'' என்று பிரமன் அஞ்சிய அச்சம் இந்த 46-ஆம் பிரதிபால் அடிபட்டுப்போகிறது.

''எல்லா உருவமுமாய் நின்றக்கால்,
இவ்உருவம்
வல்லே படைத்தால் வரம்பு உண்மை
வாராதோ''

என்ற பாடமே ஏற்றது 18 சுவடிகள் இப் பாடத்தைத்தான் ஆமோதிக்கின்றன. 4.-ஆம் எண்ணிக்கையுள்ள பதிப்பு எப்படியோ இந்தப் பாடத்தைக் கொண்டுவந்திருக்கிறது 46-ஆம் எண்ணிக்கையுள்ள பதிப்பின் பாடத்தை ஆராய்ந்த பிறகுதான் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ரகு வம்சம் இயற்றிய அரசகேசரி, கம்பனை நன்கு உணர்ந்தவர். அவர் பாடிய நூலில் ''கற்றார், கவியில் பெரிதாம் தமிழ்க் கம்பநாடன், உற்றாங்கு உரைத்தான் அவன் உரையாதன ஒதுகிற்பாம்'' என்கிறார் இவ்வடிகளைச் செல்வக் கேசவராய முதலியார் போன்றவர்கள் வேதவாக்காகக் கொண்டுள்ளனர். அரசகேசரி கூற்று உண்மையானால், அயோத்தியா காண்டத்தில், தசரதன் தன் சாபத்தைக் கூறுகின்ற பாட்டுகள் பிற்சேர்க்கையில் சேர்க்கப்பட வேண்டும். அரசகேசரி தசரதனின் சாபத்தைப் பாடியிருக்கிறார். ஆகையால், கம்பன் பாடிய சாப வரலாறு ஆய்தற்குரியது. நகர் நீங்கு படலத்தில் 71-வது பாடலில் ''தான்ஏகு என்றாள் என்றே என்றான்'' என்பதனோடு தசரதன் கூற்று நிறைவு பெறுகிறது. 72 பாடல்களில் இருந்து 87 பாடல்கள் வரை உள்ள பாடல்கள் அனைத்தும் கம்பன் வாக்காகத் தெரியவில்லை.

''வெய்ய கானத்திடையே வேட்டை வேட்கை மிகவே'' என்ற தொடரும் ''அந்த முனி சொற்றமை'' என்ற தொடரும் இன்னும் வேறு சில தொடரும் ஐயத்தை விளைவிக்கின்றன. இச் சாப வரலாறு வேறு எங்கும் குறிப்பிடப்படவில்லை. ''பிரிவு பிணியாக வரம் என்ற காலனால் இறந்தான்'' என்றே பரதன் குறிப்பிடுவான். மைந்தன்பால் கொண்ட அன்பால் தசரதன் இறந்தான் என்ற ஒரு பெருமையை இச்சாப வரலாறு குறைக்கின்றது.

வால்மீகத்திலும் ரகு வம்சத்திலும் இப் பகுதி படிக்குந்தோறும் கண்ணீர் சிந்தச் செய்கிறது. இதனை நிதானமாக ஆராய வேண்டியது அறிஞர் பொறுப்பு. எல்லாக் கவிதையும் நயமாக இருக்குமா என்று கேட்கக்கூடாது. கவிதையில் வன்மை மென்மை இருப்பது இயற்கை. ஆனால், அவ்வன்மை மென்மைக்கும் வரம்பு உண்டல்லவா? ஏகார அசைகள் இறுதியில் வருவது இயற்கை, இச்சாபப் பாடலில் ''வெய்ய கானத்திடையே வேட்டை வேட்கை மிகவே'' என்ற பகுதியில் வருகின்ற ஏகாரங்கள் கம்பன் தமிழா என்று நம்பால் கேட்கின்றன. விராதன் துதியில் 'தாய்தன்னை அறியாத என்ற பாடல் மிகப்பிரசித்தமானது அப்பாடலில் இரண்டாம் அடியில் இரண்டு மாச்சீர்கள் வந்துள்ளன. கம்பன் இச்சொச்சகங்களில் காய்ச்சீரை அமைப்பானே தவிர மாச்சீர் அமைக்க மாட்டான். ஆதலின், ''ஆயும்அறி வுறுமாலிவ் வுலகின்றாய் ஆகி ஐய!'' என்ற பாடம் ஏற்றுக்கொள்ளத் தகுந்தது.

கம்பன் யாப்பில் எங்கும் இத்தகைய குறைகளைக் காண முடியாது. இராமபிரான் அகத்தியனைச் சந்தித்த பகுதி மிக்க நயம் வாய்ந்ததாகும். அதில் உயிர்நாடியான பாடல் ''நின்றவனை வந்த நெடியோன்'' என்ற பாடல். அதில் இரண்டாம் அடியில் இரண்டாம் வேற்றுமையாகிய சுக்ரீவனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு 'உம்' என்கின்ற வாலி ஆட்சி புரிவதால் அப்பாடலின் கடைசி வரி பயனற்றுக் கிடக்கின்றது. உரை ஆசிரியர்கள்,

''நின்றவனை, வந்த நெடியோன் அடி பணிந்
தான் ;
அன்று, அவனும் அன்பொடு தழீஇ, அழுத
கண்ணன்
'நன்றுவரவு' என்று,பல நல்உரை பகர்ந்
தான்
என்றும்உள தென்தமிழ் இயம்பிஇசை
கொண்டான்''

இப்பாடலுக்கு உரை செய்தவர்கள் ''நின்றவனை நெடியோன் பணிந்தான் '', ''என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்'' அவனும் தழீஇ நல்லுரை பகர்ந்தான் என்று கொண்டு கூட்டி மிகவும் சிரமப்பட்டனர். 'அவனும்' என்ற சொல்லை 'அவனை' என்று 45-ஆம் சுவடியை

நம்பித் திருத்தி இருந்தால் நன்ருக இருக்கும். அத் திருத்தத்தோடு கவிதையைப் பாருங்கள். கவிதை புதுப்பிறப்பு எடுப்பதை நன்கு உணர்வீர்கள். இந்த உண்மையான பாடத்தைக் கெடுத்த பெருமை 46-க்கே உண்டு.

''கார்உண்வார் சுவைக்கதலியின்
கனியினைக் கழியச்
சேரும் ஊசியின் சென்றது—நின்றது என்,
செப்ப —
நீரும், நீர்தரு நெருப்பும் வன்காற்றும்,
கீழ்நிவந்த
பாரும் சார்வலி படைத்தவன் உரத்தை
அப்பகழி''

வாலியின் மார்பில் ஏவிய அம்பு மார்பைத்துளைத்ததை கவிச்சக்ரவர்த்தி இங்ஙனம் நயம்படத் தெரிவிக்கின்ருன். அப்பாடலில் ''உரத்தில் அப்பகழி'' என்று இருந்தால் அக்கவிதை இலக்கணப் பிழையிலிருந்து தப்பியிருக்கும். ''உரத்தில் சென்றது'' என்று வருமே தவிர ''உரத்தை சென்றது'' என்று வராது.

சுந்தர காண்டத்தில், கடல் தாவு படலத்தில், 27-ஆம் பாடலில் ''மழைகிழித்து உதிரமறி கடல் பாய'' என்று இருக்கிறது. ''மழை கிழித்து உதிரும் மீன்கள் மறி கடல் பாய'' என்று இருக்க வேணடும். ஊர் தேடு படலத்தில், ''சந்தப்பூம்பந்தர்'' என்ற பாடலில் ''நிருத மாக்கள் விளம்பின நெறி'' என்ற தொடரில் உள்ள நிருத மாக்களை விரட்டிவிட்டு நிருத்த மாக்களை அமர்த்த வேண்டும். தமனிய அரங்கில் நிருத்த மாக்கள்தானே இருக்க வேண்டும் ?

''பாடபேதக் குப்பைகளினின்றும் உண்மையை உணரும் ஆற்றலை வழங்குக!'' என்று இராமனிடம் பிரார்த்தித்துக்கொள்கிறேன். இக் கட்டுரையைப் படித்தபின் தயை செய்து மன்னியுங்கள். யாரை ? என்னையா ? இல்லை, இல்லை; பாடபேதம் செய்தவர்களைத்தான்,

# கொங்கு வேளிரும் கம்ப நாடனும்

மா. சின்னு

செஞ்சொற் கவிதைகளைக் கொண்டு இராம காதை இயற்றிய கம்பநாடன் தனக்குமுன் தமிழ்ப் புலவர்கள் பொழிந்த பாவின் சுவைக் கடலை உண்டு மகிழ்ந்தவன். ஆகையால்தான்,

> "பண்டைத் தமிழ்மொழியைப் — படித்துப்
> பக்குவம் செய்துவைத் தோன்"

என்று நம் கவிமணியும் குறிப்பிடுகிறார். பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவைகளைத் தன்வயமாக்கிக்கொண்ட காரணத்தால் இராம காதையில் அவனையும் அறியாமல் இயல்பாக சங்க இலக்கியங்களின் - ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன் எழுந்த காப்பியங்களின் - வாசனை ஆங்காங்கே கமழக் காண்கிறோம். அமுதம் உண்டவன் மூச்சு விடும் பொழுது அமுத வாசனை வீசும்; கள்ளுண்டவனிடம் இருந்து மதுவின் நாற்றம் வெளிப்படும். கம்பன் பண்டையோர் சமைத்த நூல்களிலிருந்து ஒவ்வோர் அகப்பை முகந்துகொண்டான் என்று கூறுவதைவிட அவன் நுகர்ந்த இலக்கியங்கள் குருதியுடன் இரண்டறக் கலந்து உயிர்ப்பிலிருந்து இயல்பாக ஆங்காங்கு வெளிப்பட்டுச் சுவையூட்டுகின்றன என்பதே சாலப் பொருத்தம்.

கம்பனுக்கு முன் தமிழில் வழங்கிவந்த ஒரே மாக்கதை கொங்குவேள் மாக்கதையாகும்.

> "திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
> விருத்தக் கவித்திறமும் வேண்டேம் —உருத்தக்க
> கொங்குவேள் மாக்கதையைக் கூறேம் குறளணுநேம்
> எங்கெழில்என் ஞாயிறு எமக்கு"

என்று ஒரு புலவர் தம்மைக் குறிப்பால் இகழ்ந்து பாடிய பழம் பாடல், கொங்கு வேளிர் எழுதிய பெருங்கதையைக் கொங்குவேள் மாக்கதை என்று குறிப்பிடுகிறது. மாக்கதை என்றால் பெரிய கதை. இது பைசாச மொழியில் குணாட்டியர் செய்த பிருகத்கதா என்ற நூலாகும். பிருகத்கதா என்றால் பெரிய கதை என்பது பொருள்.

கம்பன் தன்னுடைய நூலை மாக்கதை என்றே குறிப்பிடுகிறான். இங்குத் திருமகளின் கதை என்ற பொருளில் மாக்கதை என்ற சொற்றொடரைப் பயன்படுத்துகிறான். இனிக் கம்பனுடைய உயிர்ப்பில் அவன் உண்ட கொங்குவேள் மாக்கதையின் வாசம் வீசும் இடங்களைக் காண்போம்.

மன்னன் பிரச்சோதனனுடைய மதங் கொண்ட யானையை அடக்கித் தன் வீரத்தை யாவரும் அறியச் செய்கிறான் உதயணன். மன்னனை இடர்க்கடலிலிருந்தும் வெளியேற்றுகிறான். இராமன் சனகனிடம் இருந்த மாய வில்லை ஒடித்துத் தன் வில்லாற்றலை வெளிப்படுத்தி, சனகனை இடர்க்கடலிலிருந்து வெளியேற்றுகிறான் தமிழ் மரபுப்படி கொங்குவேளிர், உதயணன்-வாசவதத்தை இருவரின் உள்ளப் புணர்ச்சியைக் கூறுகிறார். தொல்காப்பிய நெறியில் நின்று, காப்பியத்தில் முதன் முதல் களவு மணம் கூறியவர் கொங்கு வேளிர்,

> "பைந்தொடிச் சுற்றமொடு தந்தை தலைத் தாள்
> ஆயத் திடையோள் பாசிழைப் பாவை
> யானை மிசையோன் மாமுடிக் குரிசில்"

இருவரும் அவ்வழிப் பருகுவனர் நிகழ (ஊஞ்சை-காடுபெயர்ந்தது, அடி 24-26) யானை மிசை உள்ள உதயணனும், தந்தை அருகில் தோழியர் புடைசூழ நின்ற வாசவதத்தையும் ஒருவரையொருவர் கடைக்கண்ணால் நோக்கி, நுகராநிற்க உள்ளப்புணர்ச்சி நிகழ்கிறது. தந்தை பிரச்சோதனன் அறியாமலே நிகழ்கிறது. ஆயத்தாரும் அறிந்திலர்

கம்பன் தன் மாக்கதையில் கொங்கு வேளிரைப் பின்பற்றித் தொல்காப்பியருடைய களவியல் நெறியில் நின்று, இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் நோக்க உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்ததாக அமைக்கிறான்.

> "பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
> ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
> வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
> இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்"
>
> —மிதிலைக்காட்சி-37

அங்கே வாசவதத்தை மாடத்தில் தந்தைக்கு அருகில் இருந்து உதயணனை நோக்கினுள். இங்கே, பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்ற சீதை, கன்னிமாடத்தில் சதகோடி மின் சேவிக்க மின் அரசு என்னும்படி நின்று, தந்தையாகிய விசுவாமித்திரனுடன் மிதிலை வீதியில் சென்றுகொண்டிருக்கும் வரிசிலை அண்ணலை நோக்கினுள். அண்ணலும் நோக்கினுன். இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர். இவ்வளவும் தந்தையாகிய முனிவனும் தம்பியாகிய இலக்குவனும் அறியாமலே நிகழ்ந்து முடிகிறது.

உதயகிரியின் மேல் தோன்றும் குழவி ஞாயிறு போல, மழகளிற்றின் மேல் தோன்றிய உதயணனைக் கண்ட வாசவதத்தை, மாலை நேரம் வந்ததும் வருந்தியதை,

''நிறைத்தாழ் பறித்துஎன் நெஞ்சகம் புகுந்து
கள்வன் கொண்ட உள்ளம் இன்னும்
பெறுவென் கொல்லென மறுவந்து மயங்கி''

என்று கொங்கு வேளிர் குறிப்பிடுகிருர். திருடன், வீட்டின் கதவில் உள்ள தாழை நீக்கி, வீட்டிலுள்ள பொருள்களைக் கவர்வது போல், நிறையென்னும் தாழைப் பறித்து வாசவதத்தையின் உள்ளத்தை உதயணனுகிய கள்வன் பறித்துக்கொண்டானும். உதயணனே, வாசவதத்தையின் உள்ளத்தை மட்டும் கவர்ந்தான். ஆனல், கம்பனுடைய இராமனே சீதையின், கண்வழியே புகுந்து, அவளுடைய நலன், நாண், உணர்வு ஆகிய மூன்றையும் கவர்ந்த கள்வன் ஆகிருன். இப்படி மூன்றுங் கவர்ந்த கள்வன் மேல் சினங்கொள்ளவில்லை. தன் திருவடிகள் வருந்தப் பூமிமேல் நடந்து அல்லவா சென்ருன் என்று சீதை வருந்துகிருள்.

'' பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி உணர்வும் நான்எங்கும்
காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையும்ஓர் கள்வனே கொலாம்''
—மிதிலைக்காட்சி- 55

இருகாப்பியங்களின் தலைவியரும் தம் காதலரைக் கள்வர் என்று குறிப்பிட்டாலும், கம்பன் தன் காப்பியத்தில் கொங்குவேளிர் கூறிய கருத்தை எடுத்துக்கொண்டு, மேலும் மெருகு கொடுத்து நயம்படக் கூறி நம் உள்ளத்தைக் கவர்ந்து விடுகிருன்.

வாசவதத்தை உதயணனிடம் யாழ் பயின்ற காலத்தில் நகரெங்கும் அலர் எழுந்ததை மறைப்பதற்காக வயந்தகனும் உதயணனும் ஆலோசித்துக் கணிகையாகிய நருமதையை வலிந்து தேரில் ஏற்றி அழைத்து வரச் செய்தனர். தேரில் வரும் நருமதை 'என்னை வத்தவர் பெருமகன் வருத்துவதற்கு வலிந்து கவர்ந்து வரச் செய்ததை நகரமக்களே! காண்மீராக' என்று பூசலிட்டாள். அவளைக் கண்ட நகரமக்கள்,

''மாரியும் திருவும் மகளிர் மனமும்
தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனும்
கட்டுரை யன்றியும் கண்டனம் யாம்
— ஊஞ்சை—நருமதை, 156-158

என்று கூறுகின்றனர். இங்குக் கொங்கு வேளிர் மழையும் திருமகளும் மகளிர் மனமும் தக்க இடத்தில் நிலைத்து நிற்பதில்லை; இடம் மாறி மாறிச் செல்வது இயல்பு எனக் கூறுவதாகப் பாடினுர். இக்கருத்து நம் கம்பன் உள்ளத்திலிருந்து எத்தகைய வடிவத்துடன் வெளிவருகிறது என்பதைப் பார்ப்போம்.

அயோத்தியை ஆளும் அரசர்க்கு அரசனுகிய தள்ளரும் பெரும்புகழ்த் தயரதனைச் சிறப்பிக்கும் கம்பன்,

''வெள்ளமும் பறவையும் விலங்கும்
வேசையர்
உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்''
அரசியற் படலம்—6

என்று குறிப்பிடுகிருன். திசை கெட்டு, நெறி கெட்டுத் திறங்கெட்டுச் செல்லும் மழை வெள்ளத்தையும் பறவைகளையும் விலங்குகளையும் பரத்தையர்களையும் நேரான பயன் தரும் வழியில் செல்லச் செய்யும் அளவுக்குச் செங்கோல் ஆட்சி புரிந்தான் தயரதன். இங்குக் கம்பன் உயிர்ப்பில் புதிய மணங்கமழ்வதை நுகர்ந்து இன்புறுகின்ருேம்.

மானேர் நோக்கின் வாசவதத்தைக்கு இணையானவளும் பைந்தளிர்க் கோதையும் ஆகிய பதுமாபதியைக் கனவில் கண்ட உதயணன் பொழுது விடிந்ததும் தன் தோழர்களிடம் கூறுவதை,

'விடிந்துஇருள் நீங்கலும் வடிந்த மான்தேர்
உதயண குமரன் புதையிருள் கண்ட
கனவின் விழுப்பம் மனமொன் ருகிய
தோழர்க் குரைப்ப ....''
—புணர்வு வலித்தது—1-4.

என்று கொங்கு வேளிர் குறிப்பிடுகிருர். உதயணனுடைய தோழர்கள் அனைவருமே

அமைச்சருக்கு நிகரானவர்கள் என்பதை நாம் நினைவில் நிறுத்திக்கொள்ள வேண்டும். உதயகுமரன்மனமொன்றுகிய தன் தோழர்களிடம் கனவின் விழுப்பம் உரைத்ததை ஜீரணித்திருந்த கம்பன், மந்திரப்படலத்தில் இக்கருத்தைப் புதிய பொலிவுடன் வெளிப்படுத்துகின்றுன். தயரதன் மந்திர அவையில் கூடிய அமைச்சர்கள்,

''அறுபதி னுயிரர் எனினும் ஆண்தகைக்கு
உறுதியில் ஒன் று இவற்கு உணர்வுஎன்று
உன்னலாம்
பெறலரும் சூழ்ச்சியர் திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென வந்து சுற்றினர்''
—மந்திரப்படலம், 10

அங்கே கொங்கு வேளிர் 'மனமொன்றுகிய தோழர்' என்று கூறினர். கம்பன் இக்கருத்தைத் தன் வயமாக்கி ஒரு படிமேல் சென்று 'உணர்வு ஒன்றுகிய அமைச்சர' என்று கூறுகிறுன்.

பண்டைக் காலத்தில் குற்றம் செய்தவர் களுடைய நாக்கை அரிதல் அரச தண்டனைகளுள் ஒன்றுக இருந்திருக்கிறது. வேந்தனைப்பற்றி நெருங்கிய நண்பர்களிடமும் வெஞ்சொல் கூறக் கூடாது. மீறி உரைப்பவரின் நாக்கு அரியப்படும் என்ற செய்தியை மக்கள் கூற்றுக,

''வேந்திடை யிட்ட வெஞ்சொல் ஆதலின்
சேர்ந்தோர் மாட்டும் செப்பல் தீதென
உரைப்போர் நாவிற்கு உறுதி யின்மையின்
நினைத்தது மிகையென நெஞ்சுவலி யுறீஇ''
—நருமதை சம்பம்ந்த, 15-18

என்று கொங்குவேளிர் கூறுகிறுர். இந்தக் கருத்தை நம் கம்பன், நகையாலே மூக்கிழந்த சூர்ப்பணகையின் கூற்றில் சுவைபட வெளிப் படுத்தியுள்ளான். இராமன், சூர்ப்பணகையை நோக்கி, 'பேடிப்போர் வல்லரக்கர் பெருங் குலத்தை ஒருங்கு அவிப்பதற்காகத் தேடிப் போந்தோம்; தீமாற்றம் சிலவிளம்பி வீடிப் போகாதே; இவ்வனத்தைவிட்டு ஓடிப்போ' என்று கூறிய அளவில் ஆசை விடா அரக்கி, தன் அண்ணன் இராவணனுடைய ஆற்றலையும் குற்றம் புரிவோர்க்கு அவன் கொடுக்கும் தண்டனையையும் கூறும் பொழுது,

'' ஆக்கரிய மூக்கு, உங்கை அரியுண்டாள்
நாக்கரியும் தயமுகனர்...'' [என்றுரை

என்று கூறுகிறுள்.

பண்டைக்காலத்தே மன்னர்களின் தோள் வலிமையை முதலில் வினவியறியும் வழக்கம் இருந்திருக்கிறது. இரு கவிஞர்களும் தத்தம் காவியங்களில் இவ்வழக்கத்தைக் குறிப்பிடு கின்றுர்கள். புட்பக நகரை அடைந்த யூகி, இடபகன் என்னும் தோழனைக் கண்டான். அவன் உதயணனைப் பற்றி யூகியிடம் வினவி யறிந்ததை,

'' மாண்முடி மன்னன் தோள்முதல் வினவி''
— யூகிசாக்காடு அடி— 30

என்று கொங்குவேளிர் குறிப்பிடுகிறுர்.

இராமன் இலக்குவன் சீதை ஆகிய மூவரும் அகத்தியனிடம் விடை பெற்றுப் பஞ்சவடியை அடைகின்றனர். ஆண்டு சடாயுவைக் கண்டு மகிழ்கின்றனர். வனைகழல் தயரதன் மைந்தர என்பதை அறிந்த சடாயு, உவகைக் கடலுள் மூழ்கி அவர்களைத் தழுவி,

'' விரைத்தடந் தாரினுன் வேந்தர் வேந்தன்தன்
வரைத்தடந் தோள்இணை வலியவோ?''

என்றுன்.

பூபாரம் சுமக்கும் தோள், வலிமை யுடைத்தாக இருப்பின் அவ்வரசன் தாள் (முயற்சி) வலிமையும் வாள்வலிமையும் கோல் வலிமையும் உடையவனுக இருப்பான்; அவன் வெண்கொற்றக் குடை நீழலில் குடி மக்களும் வருத்தமின்றி வாழ்வர் என்ற நம்பிக்கை நிலவிய காரணத்தால் 'தோள்இணை வலியவோ?' என்று வினவியறியும் வழக்கம் இருந்தது என்பதை அறிகிறேம்.

கம்பனுக்குப் பெருங்கதையிடம் எந்த அளவுக்கு ஈடுபாடு இருந்ததோ அந்த அளவுக்குக் கொங்கு வேளிர்க்கு இராமகாதையில் ஈடுபாடு இருந்தது. உதயணனுடைய தம்பியராகிய பிங்கலகடகர் இராசகிரி நகரத்தில் பதுமாபதியை மணந்துகொண்டு வாழும் உதயணனை வந்து கண்டு இறைஞ்சிப் புலம்பும் பொழுது,

'' இறைமீக் கூறிய இராமன் தம்பி
மறுவொடு பெயரிய மதலைக் கியைந்த
ஆனப் பெரும்புகழ் யாமும் எய்தத்
தேனர் தாமரைத் திருந்துமலர்ச் சேவடி
வழிபாடு ஆற்றலும் வன்கண் நீத்தனெம்
— மகத மேல்வீழ் வலித்தது, அடி 90-94

என்று கூறியதாகப் பாடுகிருர் கொங்குவேளிர். நம் வணக்கத்திற்குரிய ஐயர் அவர்கள் தம் குறிப்புரையில் பின் வருமாறு குறிப்பிடுகின்றுர்.

'இறைமிக்கூறிய- அரசரில் மேலாகக் கூறப்பட்ட (இராமன்), மறுவொடு பெயரிய மதலை- இலக்குமணன்; சைன நூலான வடமொழி உத்தரபுராணத்தில் இராமாயண சரித்திரம் வருமிடத்து 'சக்ரரேகையென்ற அடையாளத்துடன் கூடியவன் ஆதலால் லக்ஷ்மணன் என்ற பெயருடையவன் ஆனுன்.' (பருவம் 67, சுலோகம் 152) என்ற கருத்தமைந்த சுலோகம் கூறப்பட்டுள்ளது என்பர், ஸ்ரீமத் மு. இராகவையங்கார் அவர்கள். கலைமகள், தொகுதி 7-பக். 332.

ஆனுப் பெரும்புகழ் - தமையனை நீங்காமையால் உளதாகிய மிக்க கீர்த்தி. பெருங்கதையில் 'இராமனை விட்டு நீங்காமையால் மிக்க கீர்த்தி பெற்றுன் இலக்குவன்' என்று உதயணன் தம்பியர் இலக்குவனைப் புகழ்ந்தனர். இராமகாதையில் இராமன் தம்பி பரதன், இலக்குவனை 'இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்' என்று புகழ்கிருன்.

தெய்வ மாக்கவியாகிய வள்ளுவனின் மாட்சி தெரிவிக்கவந்த கம்பன் தமிழ்க் காவியங்களைக் கற்று உணர்ந்தவன்; சங்க இலக்கியங்களைக் கற்றுத் தன் காவியத்தில் சீர்திருத்தம் செய்தவன்; தொல்காப்பியத்தை ஆழ்ந்து உணர்ந்துள்ளான் என்பதற்கும் ஏராளமான சான்றுகளைக் காணலாம். அகத்தியம் முழுவதும் இன்று கிடைப்பின் அகத்தியரிடம் அவன் கொண்ட ஈடுபாட்டிற்கான காரணங்களை ஒப்பு நோக்கி அறிந்து இன்புறமுடியும். கொங்கு வேளின் ஆழ்ந்த கவியுளத்தில் மூழ்கி எழுந்தவன் கம்பன் என்பதற்கு இன்னும் பல ஒப்பீடுகள் இருப்பினும் - அவைகளை விரிப்பிற் பெருகும் என்று அஞ்சி இத்துடன் நிறைவு செய்கிறேன்



உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும் !
நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா !
அலகிலா விளையாட்டுடை யார்அவர் !
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே !

திருவழுந் தூர்வரு தேவே போற்றி !
அருள்வழி உணர்த்துபேர் அந்தண போற்றி !
தமிழ்தவம் செய்தமா தவமே போற்றி !
அமிழ்தினும் இனியசொல் அருளினை போற்றி !
உலகமா கவிஎன ஒளிர்வாய் போற்றி !
கலைகளின் பெருங்கடல் கடந்தாய் போற்றி !
பொன்னித் துறைதவழ் புனித போற்றி !
கன்னித் தமிழ்த்திறம் காட்டினை போற்றி !
முத்தமிழ்த் துறையின் வித்தக போற்றி !
சித்தம் அழகிய சேவக போற்றி. 10

இதிகா சத்துறை ஏறே போற்றி !
விதிவலி உணர்த்தும் மதிவல போற்றி !
சாத்திரம் நன்குணர் சதுரனே போற்றி !
பாத்திரம் சுவைசெயும் பாவல போற்றி !
புவிமுழு தளந்த புலவனே போற்றி !
கவிஞரில் ஓங்கிய கலைஞனே போற்றி !
மாயாப் புகழொடு வாழ்வாய் போற்றி !
தாயாய் அறத்தைத் தாங்குவாய் போற்றி !
பெண்மைக் குயர்வு பேணுவாய் போற்றி !
உண்மைக் குருவம் உதவினை போற்றி. 20

நடையில் நின்றுயர் நாயக போற்றி !
சடையன் புகழ்விரி தலைவ போற்றி !
இறைஉயிர் முறைஅறி எம்மான் போற்றி !
பொறைசயத் துறைஎனும் புனித போற்றி !
கற்பனைத் திறம்பல கவித்தனை போற்றி !
அற்புதம் படைக்கும் அரசே போற்றி !
காவிய வானக் கதிரவ போற்றி !
ஓவியக் கவிதைக் கொருவனே போற்றி !
விருத்தக் கவிக்கொரு வேந்தே போற்றி ! 30
கருத்துப் புரட்சிக் கவிஞனே போற்றி

என்றுமுள தென்தமிழ் இயம்பினை போற்றி!
தென்றலைப் புலியாய்ச் செய்வாய் போற்றி !
இராமாவ தாரம் ஈந்தாய் போற்றி!
பராவரும் கவிவலம் படைத்தாய் போற்றி !
வான்மிக மணிக்கொளி வழங்கினை போற்றி !
கோன்மை நெறிஉணர் கொற்றவ போற்றி !
வெண்ணெய் வளர்த்த விளக்கே போற்றி !
மண்ணில் வாழ்ந்த வானவ போற்றி !
அலகிலா விளையாட் டறிவே போற்றி ! 40
உலகெலாம் போற்றும் உத்தம போற்றி

பெருமையே வடிவாய்ப் பிறங்குவாய் போற்றி !
அருமையைச் சொல்லில் அமைத்தாய் போற்றி !
பலகலை ஆர்ந்த பனிமதி போற்றி !
உலகம் பொதுஎன உரைத்தனை போற்றி !
அனைத்துயர் காப்பியம் ஆக்கினை போற்றி !
மனத்துவம் நன்குணர் மன்னவ போற்றி !
மாயா சனகனை வடித்தனை போற்றி !
தோயாத் துறையிலாத் தோன்றலே போற்றி !
தத்துவ நிலைதெரி சத்துவ போற்றி ! 50
சித்திரம் எனக்கவி தீட்டினை போற்றி !

வள்ளுவன் நெறிசெலும் வள்ளலே போற்றி
ஒள்ளிய துணர்ந்தநல் உணர்வோய் போற்றி
காவிரி நலமுணர் காதல போற்றி
பாவிகம் முழுதுணர் பருணித போற்றி
மெய்ப்பா டுணர்ந்திடும் விபுதா போற்றி
துய்ப்பார்க் கினித்திடும் சொல்வல போற்றி
பவித்திரப் பெருங்கதை பகர்ந்தாய் போற்றி
செவிக்குறு தேன்பொழி செம்மலர் போற்றி
மக்களுக் குரிமை வரித்தனை போற்றி
தக்கநற் கவிதைத் தச்சனே போற்றி. 60

நுண்கலை உணர்த்திடும் நூலோய் போற்றி
வண்கவிச் சக்கர வர்த்தியே போற்றி
கல்வியிற் பெரிய கடலே போற்றி
செல்நெறி காட்டும் தேசிக போற்றி
அமர காவிய அமுதே போற்றி
சமரம் காட்டலில் சமனிலி போற்றி
செந்தமிழ்க் குயர்வருள் செம்மலே போற்றி
அந்தமில் சுவைபொழி அண்ணல் போற்றி
உலகுடன் பிறப்பென உணர்த்தினை போற்றி
விலகலாப் பொருளுரை மேலவ போற்றி. 70

வேதாந் தப்பொருள் விரித்தனை போற்றி
நாதாந் தத்துறை நாவல போற்றி
அழுக்கறு நெறிதரும் அறவோய் போற்றி
ஒழுக்கம் பேணிடும் ஒண்தவ போற்றி
கற்பு நெறிக்கொரு காவல போற்றி
சொற்பொருள் கணித்த தூயோய் போற்றி
திருக்குறள் விரிவுரை செய்தவ போற்றி
மருட்கொளா நெறிவளர் மாண்பினை போற்றி
துன்பிலே சுகமெனச் சொல்லினை போற்றி
அன்பதே ஆக்கம்என் றறைந்தனை போற்றி. 80

கவியினுக் கணிஎனும் கண்ணே போற்றி
செவிநுகர் கனியருள் சிற்குண போற்றி
படைக்கலப் பரிசுணர் பண்பனே போற்றி
அடைக்கலம் காக்குநல் அருளோய் போற்றி
ஆன்றவிந் தடங்கிய ஐயா போற்றி
சான்றவர் இனத்தொரு தக்கோய் போற்றி
அம்பிகா பதிதரும் அத்தா போற்றி
கும்பிட்டு வாழ்கிலாக் குலபதி போற்றி
அந்தியைக் காலனாய் ஆக்குவாய் போற்றி
சந்தமார் சுவைவளம் தந்தனை போற்றி. 90

நாடக அணிக்கொரு நாதனே போற்றி
வீடுறு நெறியதும் விளக்கினை போற்றி
மறைப்பொருள் விளக்கிடும் மாதவ போற்றி
பிறப்பெலாம் சமனெனப் பேசுவாய் போற்றி
தமிழ்ப்பண் பாட்டின் தாயே போற்றி
நிமிர்கடன் உணர்த்தும் நெறிவல போற்றி
யாரொடும் பகைகொளேல் என்றவ போற்றி
போரொடுங் கிடவழி புகன்றவ போற்றி
மக்களே உயிர்என வகுத்தனை போற்றி
மன்னனை உடலென மாற்றினை போற்றி. 100

அறிவினுக் கறிவினை அறிபவ போற்றி
செறிபெரும் கேள்விச் செல்வனே போற்றி
சமய நோக்கினில் சமரச போற்றி
குமரித் தமிழ்க்கொரு கோவே போற்றி
மானிடப் பெருமை வளர்த்தனை போற்றி
தேனிசைத் தமிழின் தெய்வமே போற்றி
நாட்டரசன் கோட்டை நயந்தாய் போற்றி
போற்றி கம்பனே போற்றி போற்றி. 108

உன்னை உள்ள படியறியேம் ;
உலகை உள்ள திறமுள்ளேம் ;
பின்னை அறியேம், முன்னறியேம்,
இடையும் அறியேம் ; பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை அடியேம் செயற்பால ?
இன்ப துன்பம் இல்லானே !

வாழிதமிழ் நாகரிகம்.
வாழிதமிழ்ப் பண்பாடு
வாழிதமிழ் வேதமருள்
வள்ளுவனர்-வாழியரோ
இன்பம் பெருக
இருசெவியும் தேன்பாய்ச்சும்
கம்பனும் எங்கள்
கவி.

---

ஓம்

## வள்ளுவன் மலர் வணக்கம்

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும்,—நீங்கலா
அலகிலா —விளையாட்டு உடையார்—அவர்
தலைவர் ; அன்னவர்க்கே சரண் நாங்களே !

திருமயிலை அவதரித்த தேவா போற்றி !
திருக்குறளை உபகரித்த செம்மால் போற்றி !
ஒருபெரிய இறையுண்மை உரைப்பாய் போற்றி !
உலகியலின் நிலைமுழுதும் உணர்ந்தாய் போற்றி !
அருள்மலரும் அறம்வகுக்கும் ஐயா போற்றி !
ஆம்பொருளின் திறம்கணிக்கும் அரசே போற்றி !
பொருவரிய இன்பநலம் புகல்வாய் போற்றி !
புவியுளநாள் வரையுமுள புனிதா போற்றி ! 8

பாயிரநான் கவற்றைநனி பகுத்தாய் போற்றி !
படர்கடவுள் வாழ்த்தினைமுன் பகர்ந்தாய் போற்றி !
மாயிருவான் சிறப்படுத்து வைத்தாய் போற்றி !
மற்றதன்பின் நீத்தார்சீர் வகுத்தாய் போற்றி !
ஏயுமறன் வலியுறுத்தல் இசைத்தாய் போற்றி !
இல்வாழ்வின் மாண்புணர்த்தும் எந்தாய் போற்றி !
தூயவாழ்க்கைத் துணைநலம்சொல் தோன்றல் போற்றி !
துகளறுமக் கட்பேற்றைத் தொகுப்பாய் போற்றி ! 16

அன்புடைமை விருந்தோம்பல் அமைத்தாய் போற்றி !
அஃதோடின் சொல்லருமை அருள்வாய் போற்றி !
நன்னன்றி மறவாமை நவின்றாய் போற்றி !
நடுவுநிலை வற்புறுத்தும் நல்லோய் போற்றி !

தன்னடக்கம் பேணுகெனும் தக்கோய் போற்றி !
தனிஒழுக்கம் குடிமைஎனும் சான்றோய் போற்றி !
அன்னியனில் விழையாமை அறைந்தாய் போற்றி !
அரும்பொறையை விதந்துரைக்கும் அரசே போற்றி ! 24

அழுக்காற்றை வெறுத்தொதுக்கும் அறிவோய் போற்றி !
அஃதொடுவெஃ காமையுரை அறவோய் போற்றி !
இழுக்காகும் புறங்கூறல் என்பாய் போற்றி !
எழில்பயனில் சொல்மறுக்கும் இனியோய் போற்றி !
அழிசெயுந்தீ வினையஞ்ச அறைவோய் போற்றி !
அருமந்த ஒப்புரவை அருள்வோய் போற்றி !
வழுவில்புகழ் ஈகையின்பின் வைத்தாய் போற்றி !
மன்னருளே செல்வமென வகுத்தாய் போற்றி ! 32

ஊன் உண்ணல் கொலைபுரிதல் ஒறுத்தாய் போற்றி !
ஒண்தவத்தால் வாய்மையால் உயர்ந்தாய் போற்றி !
தான்வெகுளல் திருடுதலைத் தவிர்ப்பாய் போற்றி !
தவம்துறவு வாய்மைநெறி தந்தாய் போற்றி !
மேன்மைதரு மெய்யுணர்தல் விரித்தாய் போற்றி !
விழைந்தின்னா செய்கயமை வெறுத்தாய் போற்றி !
வான்பெரிய ஊழ்வலியை வகுத்தாய் போற்றி !
வளர்முப்பத் தெட்டிலறம் வடித்தாய் போற்றி ! 40

கோன்மைநெறி முறையெல்லாம் குணிப்பாய் போற்றி !
கொற்றவர்தம் தரமெல்லாம் குறிப்பாய் போற்றி !
மேன்மையுயர் கல்விநலம் விரிப்பாய் போற்றி !
மிகுசெல்வம் கேள்விஎனும் விபுதா போற்றி !
தேனெனவே மாண்பெல்லாம் செய்தாய் போற்றி !
செருமுதலா யாவையுமே தெரிப்பாய் போற்றி !
ஊனமிலா நாடெதென்று உய்ப்பாய் போற்றி !
உறுப்புகள்தம் கடமையையும் உரைப்பாய் போற்றி ! 48

எது அமைச்சாம் எனவிளக்கும் ஏந்தால் போற்றி !
இவர்வினைகள் முழுதுணர்த்தும் இனியோய் போற்றி !
பொதுமகள்தம் தொடர்பறுக்கும் புனிதா போற்றி !
பொருள்செய்யும் வகையருளும் பொருளோய் போற்றி !
மதுவிலக்கைக் கொணர்ந்தமுதல் மகாத்ம போற்றி !
வளர்பகையின் திறமெல்லாம் வடிப்பாய் போற்றி !
புதுமுறையிற் பழைமைநலம் புரப்பாய் போற்றி !
புரிசூது கடிகின்ற புலவோய் போற்றி ! 56

குடியியலை வகுத்தபெருங் குருவே போற்றி !
கொள்பணிவின் பெருமைசொலும் கோவே போற்றி !
படியிதனில் உயர்மானம் பகர்வாய் போற்றி !
பரவுமுயிர் சமமென்னும் பழையோய் போற்றி !
கொடிதெதிரே இனிதுசெயும் குரிசில் போற்றி !
கூறுபண்பாட் டழகைஎலாம் குவிப்பாய் போற்றி !
மடியதனின் தீமையெலாம் வகுப்பாய் போற்றி !
மாண்புடைய ஊக்கமதை வளர்ப்பாய் போற்றி ! 64

எழுபதினில் பொருள்விளக்கம் ஈந்தாய் போற்றி !
இருபத்தைந் தினிற்காமம் இசைப்பாய் போற்றி !
பழுதில்தகை அணங்குறுத்தும் பாவோய் போற்றி !
படர்குறிப்பை அறியவுரை பண்போய் போற்றி !
எழில்நலத்தைப் புனைந்துரைக்கும் இனியோய் போற்றி !
இருங்காதற் சிறப்போதும் எழிலோய் போற்றி !
வழுவில்லா நாண்துறக்க வைத்தாய் போற்றி !
வையம்அலர் புரிநன்மை மதித்தாய் போற்றி ! 72

கற்புடையார் நிலைஎல்லாம் கணித்தாய் போற்றி !
கண்தேடிக் கலங்கலையும் கவித்தாய் போற்றி !
அற்கனவின் நலம்புகலும் அழகே போற்றி !
அத்தோடு மனம்புலத்தல் அறைந்தாய் போற்றி !

தற்பிரிந்தார் தனியேக்கம் சமைத்தா— போற்றி !
தனிப்புலவி துனிமுதலாய்த் தந்தாய் போற்றி !
சொற்செட்டில் இணையில்லாத் தோன்றல் போற்றி !
சுவைமலியப் பயன்சுரக்கும் சுடரே போற்றி ! 80

ஒப்பாரு மில்லாத ஒருவ போற்றி !
உலகிலொரு தனிமகனாய் உயர்ந்தாய் போற்றி !
தப்பேதும் புரியாத தலைவ போற்றி !
சலியாத படியறத்தைத் தந்தாய் போற்றி !
செப்பும்உரை பத்துடைய செல்வா போற்றி !
திகழ்மொழிகள் யாவும்புகழ் செம்மால் போற்றி !
அப்பாஎம் தமிழறத்தின் அச்சே போற்றி !
அகிலமெலாம் கொள்அறம்செய் அத்தா போற்றி ! 88

முப்பாலைத் தமிழ்மறையை முகிழ்த்தாய் போற்றி !
முதுமொழி, பொய்யாமொழியை மொழிந்தாய் போற்றி !
செப்பரிய பொருளுரையைச் செய்தாய் போற்றி !
தெய்வநூல் பொதுமறையைத் தெரித்தாய் போற்றி !

ஒப்பரிய வாயுரைவாழ்த் துரைத்தாய் போற்றி !
உத்தரநல் வேதமருள் உரவோய் போற்றி !
துப்பாரும் வள்ளுவத்தைச் சொரிந்தாய் போற்றி !
தூயதிரு வள்ளுவர்நூல் சொற்றாய் போற்றி ! 96

மன்னுபெயர் தேவர்என வாழ்வாய் போற்றி !
மாதானு பங்கிஎனும் வள்ளால் போற்றி !
பன்னுதனிப் புலவர்எனப் படர்வாய் போற்றி !
பகருமுதற் பாவலர்ஆம் பண்பா போற்றி !
செந்நாப்போ தார்என்னச் சிறந்தாய் போற்றி !
திருத்தெய்வப் புலவர்எனத் திகழ்வாய் போற்றி !
உன்னுபெரு நாவலர்ஆய் உயர்ந்தாய் போற்றி !
உலகிலொரு நாயனார்என்(று) உள்ளாய் போற்றி ! 104

அறம்படைக்கும் நான்முகனார் ஆனாய் போற்றி !
அரும்பொய்யில் புலவர்எனும் அருளோய் போற்றி !
திறம்படைத்த தமிழ்படைத்த தேவே போற்றி !
செய்யதிரு வள்ளுவனே போற்றி ! போற்றி ! 108

நிறம்படைத்த கவிகம்பன் நெஞ்சம் ஆர
நிமிர்'தெய்வ மாக்கவி'யாய் நினைந்து போற்றும்
மறம்கடிந்த தமிழ்அறவோன், மண்டும் கீர்த்தி
வள்ளுவன்தாள் தலைக்கணிந்து மகிழ்ந்து வாழ்வாம்.

ஓம்

# இளங்கோ மலர் வணக்கம்

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா—
அலகிலா விளையாட்டு உடையார்—அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே !

சேரர் குலந்தரு செல்வா, போற்றி !
வீர வஞ்சியின் விளக்கே, போற்றி !
குடக்கோச் சேரல் குரிசிலே, போற்றி !
இடங்கொள் பெரும்புகல் இளங்கோ, போற்றி !
மணிமுடி துறந்த வள்ளால், போற்றி !
குணவாய்க் கோட்டக் குடியாய் போற்றி !
துறவுமேற் கொண்ட துணிவே, போற்றி !
அறநெறி ஓம்பும் அந்தண, போற்றி !
முத்தமிழ்த் துறைவல உத்தம, போற்றி !
சித்தம் அழகிய செம்மால், போற்றி ! 10

ஆடகச் சிலம்பை அருள்வாய், போற்றி !
நாடவை மூன்றையும் நவின்ருய், போற்றி !
காண்டம் மூன்ருய்க் கணித்தாய், போற்றி !
காதை முப்பதாய்க் கவித்தாய், போற்றி !
பாட்டும் செய்யுளும் பகர்ந்தாய், போற்றி !
நாட்டினை உரைதனை நடுநடு, போற்றி !
விருத்தப் பாவின் வித்தே, போற்றி !
திருத்தமாய் எண்வரி தீட்டினை, போற்றி ?
சந்தமார் கவிதரு முந்தையே, போற்றி !
செந்தமிழ் வீறெலாம் தெளிந்தாய், போற்றி ! 20

இயலிசை நாடக ஏறே, போற்றி!
பயில்நடம் முழுதுணர் பருணித, போற்றி !
இசைக்கடல் அளவிடும் இபமே, போற்றி !
வசையில் இயல்கணி மாண்பே, போற்றி !
முழவதன் வகைஎலாம் மொழிபவ, போற்றி !
குழலதன் இலக்கணம் கூறுவாய், போற்றி!
யாழினத் திறனெலாம் இசைத்தாய், போற்றி !
வாழ்மிடற் றெலிநெறி வகுத்தாய், போற்றி !
ஆடுவார் அமைதி அறைந்தனை, போற்றி !
ஆடரங் கியல்பெலாம் அளந்தாய், போற்றி ! 30

பாட்டியல் நெறியெலாம் பகர்ந்தாய் போற்றி !
நாட்டிய வரம்பெலாம் நவின்ருய், போற்றி !
தொழில்புரி கரப்பெயர் தொகுத்தாய், போற்றி !
ஏழிற்கரம் சொல்முதல் எந்தலே, போற்றி !
மங்கல வாழ்த்தியல் மலர்ந்தாய், போற்றி !
திங்களைப் போற்றிடு செம்மால், போற்றி !
ஞாயிறு தொழுதிடு நம்பா, போற்றி !
மாமழை வணங்குநல் மணியே, போற்றி !
பூம்புகார் பரவுசீர் புலவ, போற்றி !
தேம்பெறு காதை செய்தவ, போற்றி ! 40

வணிகர் திருமணம் வரைந்தாய், போற்றி !
அணிதிகழ் மனையறம் அமைத்தனை, போற்றி !
மாநாய் கன்மகள் வளர்த்தாய், போற்றி !
மாசாத் துவான்மகன் மதித்தாய், போற்றி !
கற்பிற் கோருரு படைத்தாய், போற்றி !

கண்ணகி எனப்பேர் கொடுத்தாய், போற்றி!
வற்பிற் கோருரு வடித்தாய், போற்றி!
மாகோ வலனென மதித்தாய், போற்றி!
பொற்பிற் கோருரு பொளிந்தாய், போற்றி!
புகழ்மா தவிஎனப் புகன்ருய் போற்றி! 50

அற்புக் கோருரு அமைத்தாய், போற்றி!
அதுமா தரிஎன் றறைந்தாய், போற்றி!
நிற்புக் கோருரு ஈந்தாய், போற்றி!
நேயக் கவுந்தியாய் நிறைத்தாய் போற்றி!
மாட மதுரை மகிழ்வாய் போற்றி!
பீடார் உறந்தை பேசுவாய் போற்றி!
கலிகெழு வஞ்சியின் காதல போற்றி!
ஒலிபுனல் புகாரை உகப்பாய் போற்றி!
வேங்கடம் பொதியம் விளம்புவாய் போற்றி!
தீங்கில்செங் குன்றும் செப்புவாய் போற்றி! 60

காவிரி வையை காட்டுவாய், போற்றி!
மேவுபே ரியாறதும் விளக்குவாய், போற்றி!
பொய்கை ஐந்தும் புகல்வாய், போற்றி!
தெய்வம் பலவும் தெரிக்குவாய், போற்றி!
சமய சமரசத் தவசியே, போற்றி!
அமையருள் அறநிறை அடிகாள், போற்றி!
நாட்டையும் நகரையும் காட்டுவாய், போற்றி!
தேட்டின் சிறப்பெலாம் தீட்டுவாய், போற்றி!
ஏர்த்தொழில் உழவினை ஏத்துவாய், போற்றி!
ஆர்த்தெழு வாணிகம் அளப்பாய், போற்றி! 70

போர்த்தொழில் கொற்றம் புகழ்வாய், போற்றி!
பார்ப்பனர் சிறப்பெலாம் பகர்வாய், போற்றி!
மாடமும் வீதியும் வகுப்பாய், போற்றி!
ஆடகக் கோயில் அமைப்பாய், போற்றி!
அருகனைப் புத்தனைத் தொழுவாய், போற்றி!

முருகனைச் சிவனைப் புகழ்வாய், போற்றி!
சந்திர சூரியற் சாற்றுவாய், போற்றி!
இந்திரன் ஐயையை ஏத்துவாய், போற்றி!
மால்பல தேவனை வணங்குவாய், போற்றி!
சால்பல கோட்டமும் தருவாய், போற்றி! 80

பத்தினிக் கடவுளைப் பரசுவாய், போற்றி!
சித்திரக் காப்பியம் செய்தனை, போற்றி!
ஒருமுழுத் தமிழகம் உதவினை, போற்றி!
இருவினைப் பயன்மொழி எந்தாய், போற்றி!
உய்வகை உணர்த்தும் ஒண்தவ, போற்றி!
தெய்வம் தெளியத் தெரிப்பாய், போற்றி!
தெளிந்தோர்ப் பேணச் செப்புவை, போற்றி!
ஊன்ஊண் பொய்யுரை ஒறுப்பாய், போற்றி!
கள்ளும் காமமும் கடிவாய், போற்றி!
வெள்ளைக் கோட்டியை வெறுப்பாய், போற்றி! 90

அறமனை பேண அருளுவை, போற்றி!
பிறமனை அஞ்சப் பேசுவை, போற்றி!
இம்மையில் மயங்கேல் என்பவ, போற்றி!
அம்மையைப் பார்க்க அருள்வாய், போற்றி!
அறவோர் அவையில் அடைப்பாய், போற்றி!
பிறவோர் அவையின் பெயர்ப்பாய், போற்றி!
உய்தவம் தானமும் உரைப்பாய், போற்றி!
செய்நலம் நினைகெனத் தெரிப்பாய், போற்றி!
பொய்க்கரி போகலென் புனிதா, போற்றி!
எய்உயிர் காவெனும் எம்மோய், போற்றி! 100

பொருள்மொழி பிடிஎனும் போதா, போற்றி!
அருள்நெறி ஒழுகெனும் அத்தா, போற்றி!
உளம்கவர் காப்பியம் உதவினை, போற்றி!
வளங்கெழு பாத்திரம் வகுத்தனை, போற்றி!
துன்பியல் நாடகம் தோற்றினை, போற்றி!

இன்பருள் காதை இயற்றினை, போற்றி !
நலப்பெரும் உத்திகள் நயந்தவ, போற்றி !
தலத்தினில் முதிய தமிழ்க்காப் பியமாம்,
சிலப்பதி காரச் செழுங்கதை திருத்திய,
துளங்கா நல்மனத் துறவி யான,
இளங்கோ அடிகள் போற்றி, போற்றி !

108

முத்தமிழ்க் காப்பியம் மொய்ம்புடன் ஆக்கி
இத்தரைக் குதவிய இளங்கோ முனிவன்
சித்தம்நேர் அழகிய திருவடித் தாமரை
பத்தியோ டேத்திப் பணிந்து வாழ்வாம்.

———